kshemarum Series No 7



# olkappia Moolam.

[With Head Notes, Author's Sketch Etc ]



EDITED BY

PANDIT P C PUNNAIVANANATHAN,

EDITOR, PANDIYA NESAN, MADURA.

MEENAKSHI VILAS PRESS, MADURA.

இலக்கியரமும் கோவை-மணி எ

# தொல்காப்பிய மூலம்

[கருத்து, பாடபேதக்குறிப்பு முதலியவற்றுடன்]

மதுரைத் தமிழ்ச்சங்கத்துறுப்பினரும்,
ஆங்கில கலாசாலைப் பரீக்ஷகர் ரங்கத்தலைமைச்
சரும், செந்நாட்போரா செந்தமிழ்ச்சங்கத்
தலைவரும், [illegible] ஹைஸ்கூல்
தலைமைத் தமிழாசிரியரும், பாண்டியதேசன்
பத்திரிகாசிரியருமாகிய

திருத்தகு
P.சிதம்பரபுன்னைவனநாதமுதலியார்
பதிப்பித்தது

மதுரை
P. N. சிதம்பரமுதலியார் அன் கோ,

வெளியிட்டது.

காபிரைட் ரிஜிஸ்டர்டு | 1922 துந்துபி | விலை ரூபாய். க



பி. நா. சிதம்பரமுதலியார் அண் கோ,

புத்தக வியாபாரம், மதுரை.

# FOREWORD

BY

M R.By T C SRINIVASA IYENGAR Avl. B A B L.
High Court Vakil, MADURA,
MEMBER, LEGISLATIVE COUNCIL, MADRAS
AND
Honorary Secretary, MADURA TAMIL SANGAM,
MADURA

Tholkappiam is the earliest work in the Tamil language now extant. The author Thrinathoomagni Muni, son of Jamathagni Rishi, is one of the twelve disciples of Agasthya, the patron saint of the Tamils. Being a Bhargava, he goes by his family name in its dravidianised form, and as such is familiarly known as Tholkappiar (தொல்காப்பியர்)

The introduction to the work was written by Panambaranar, the author's friend and colleague as a disciple. From it we learn that the work was read out to learned men in the presence of Athankotasan another of the eminent disciples of Agasthya, in the court of the Pandiyan King. That the work must have passed through the critical ordeal and won high approbation is borne out by two undoubted circumstances



viz that, after this work, that earlier work of the master Agasthya, became obselete and that in spite of many later learned works on the subject தொல்காப்பியம் and its classical commentaries have, through all the time extending over several centuries, continued to be the source of authority in grammar.

It is difficult to fix the date of this great work. That it is very ancient goes without saying. This work is said to be a work of the second of the renowned Sangams The introductory verse of Panambaranar states that the work is full of the principles from Ainthra Vyakarnam. It is deducible therefrom that when Tholkappiam was composed either Paniniya Vyakarnam did not exist or had not attained any celebrity If the inference be correct, the work must have been composed 5 or 6 centuries before the Christian era

Malavai Mahalinga Ayyar was the first to print the 1st book of this work. The late C. W. Thamotharam Pillai, several years ago, laid the Tamils, under a deep debt of gratitude by bringing out in print an edition of all the 3 books of this work with the commentary. Some years back that indefatigable worker in



the cause of Tamil, Mr Bavananthain Pillai, brought out an edition of the 3rd book of this work with commentary. The Madura Tamil Sangam published a section of one of the books of the work with a commentary Mr M Ragaviengar the chief Tamil Pandit of the Tamil Lexicon Committee, has, at the instance of Dr. Sri Kanta Litt. D of Colombo written a lucid exposition of the principles of the third and biggest book of தொல்காப்பியம் in fine prose and this was published by the Madura Tamil Sangam recently.

My friend Pandit P C. Punnaivananatha Mudaliar's plucky attempt to bring out a neat and handy edition of the Text alone of the great work for easy and ready reference with head notes of the subject matter of the Sutrams, will

be widely appreciated and encouraged. Though the work requires no introduction to the public, still, it is a great pleasure to me to comply with my friend's desire to write this brief preface.

Madura }
21—5—22 } T. C. SRINIVASAN.

மதுரைத்தமிழ்ச்சங்கக்கலாசாலைத் தலைமைத்தமிழா
சிரியரும், செந்தமிழ்ப்பத்திராசிரியரும்,
சென்னைக்கு விஜயஞ்செய்த மாட்சிமிக்க வேல்ஸ்
இளவரசரவர்களால் சன்மானிக்கப்பெற்ற
தமிழ்ப்புலவர்களிலொருவருமாகிய
எதிரகோட்டை
ஸ்ரீமத் திரு நாராயணையங்காரவர்கள்
எழுதிய சிறப்புரை

---

இக்காலத்துள்ள பழைய தமிழ் நூல்களிற் சிறந்ததாயும், முற்காலத்திருந்த தமிழ் நூல்வகைகளையும், செய்யுள்வகைகளையும் வழக்கு வகைகளையும் அறிதற்குச் சிறந்த கருவியாயுமிருக்கிற தொல்காப்பியத்தைப் பலரெழுதியவுரையுடன் பலபகுதிகளாகப் பலரும் அச்சிட்டிருப்பினும், இதுகாறும் மூலபாடம் மட்டும் தனியே ஒருபுத்தகமாக ஒருவராலும் பதிப்பிக்கப்படாதிருந்த குறை தீருமாறு, மதுரைத் தமிழ்ச்சங்கத்திற் கல்விபயின்றவரும், மதுரையில் ஸௌராஷ்டிர ஹைஸ்கூல் தமிழ்ப்

* மற்றைபபுலவாகளை,மகாமகோபாதகியார் ஸ்ரீ உ வே. சாமிநாதையரவாகள் திருநெலவேலி ஹிநது காலேஜ் தலைமைததமிழாசிரியா ஸ்ரீ சுப்பிரமணியகவிராயரவர்கள். தஞ்சாவூர்க்கலியாணசுநதரம ஹைஸகூல் தமிழாசிரியர் ஸ்ரீ எல் உலகநாதபிள்ளையவாகள்.



பண்டிதராயிருபபவருமான ஸ்ரீமத். புன்னைவன ாாத்முதலியாரவாகள் பல பிரதிகளை வைதது ஒப்புபபாாதது மூலசூததிரஙகளை ஒருஙகெழுதி, ஒவ்வொரு சூததிரததும முதலில நுதலுமபொருள் காட்டி, தொலகாபபியததினவேறுன சிலமுததகச செயயுாகளைப பாயிரததின புறமபே காபபாசச சோததுப பனம்பாரனுா,ஆத்திரேயன் பேராசிரியன் இவாகளியறறிய பாயிரச செய்யுள்களுடன அச' சிட்டிருபபது பாராட்டததக்கது.

இபபுததகம மூலபாடம் வரப்பண்ணுமவர்கரும், வநதபினனும மறவாதிருககச சிநதிப்பவர்ககும,பிறர்ககும திருக்குறள்மூலம் போலமிகவுமஉபயோகமாகும இபபுததகததை அசசிட்டுதவியதனறியே, செயயுடபாடகசோவை முதலிய சில புத்தகஙகளைத திரட்டியும இயறறியும அசசிட்டுதவிய முதலியாரவர்கள ஊககமும உழைபபும பாராட்டததககன. இனனோனன பழநதமிழநூல்களை அசசிட்டுதவிவரும பி. ஈ. சிதம்பரமுதலியார் கம

பெரியாருக்குத் தமிழ்மக்கள் நன்றிபாராட்டுங்
கடப்பாடுடையராவர்.

மதுரை }
26-5-22 } திரு. நாராயணையங்கார்.

உ

தொல்காப்பியப்பாயிரவிருத்தியாசிரியர்
அரசஞ்சண்முகனார் மாணாக்கரும், மதுரைத் தமிழ்ச்
சங்கத்தலைவரும், திருவாலவாயுடையார் கோயிற்
பு டையாரும் ஆகிய

## திருவாளர். ம. சுந்தரபாண்டிய ஓதுவார்

அவர்கள் கூறிய

# சிறப்புப்பாயிரம்.

நேரிசையாசிரியப்பா

---

வண்ணநீரக் கருங்கடல் மலருலக் குவப்பத்
தண்ணறுந் தாதிறத் தமிழ்நிலை கமழும்
எழுத்தொலி முறையி னியன்றுசொல் மு[illegible]
பழுத்தரும் பொருட்சுவை பரந்த தொல்காப்பிய
பாயிரத் தறுநூற் றொருபது சூத்திரத்
தாயமு வொண்பா னியலறுவ கிளைத்தே
தென்மது ராபுரித் தொன்முது சங்க
மன்னினின் றிடைக்கடை மாசறு புலவர்க்
கொருதா னாகிநல் லுரைபல சிவணி

மருவுறு தமிழ்மொழி மக்கட் குறுதியிற
சிறந்து பின்னூறு மொழிச்சிறு விழிகள
திறந்திடத் தொல்காப் பியனசெமிழப் பித்தனன்

(x1)

அந்தக்கு தொன்னூல் வித்தக மூலம
வழக்கா றமைய வரைந்துறு லாசான்
ஒழுக்கா றமைவா லாற்றுட னுதவினன
பூம்பொழி லெழில்பெறு புத்த சேரியுண
மேம்படு வேளாண குலமுடியார வழி
வழிவரு மாங்கில மொழிபுணர் மாண்பிற
கழிபெறு கடற்கரைக் கைதையங் கானல
உப்பளக் கண்காண உதவியம பணிபுரினன
செப்பரும புகழுடைச சிதம்பர நாதன
நல்கிய தீந்தமிழ நலங்கனி நாவினன
மல்கிய தமிழச்சங கத்தமர் மாண்பினன்
சௌராட டிரவுயர் தாக்கலைக கூடத
தொவகிய தமிழ்க்கலைக கொருமுத லாசான
ஆங்கில சாலை யமர்தரு பண்டிதர
பாங்குறு சங்கமும பலஅவைக களமும
போற்றிசின ரொழுகும் புலமை யோனெனப
போற்றுறு தகையினன் புண்ணியன திருத்தகு
புன்னைவன நாதன் என்னு
மன்னுபேர் நிறுவிய வாய்மை யோனே.

தாதுபிலு
வைகாசிமீ கசஉ. } சுந்தரபாண்டிய ஓதுவார்,



உ

திருச்சிற்றம்பலம்

## பதிப்புரை.

---

"தந்தமொன் றேய்க்கருங் குனறையன் பாரத ஞப
புரஜிவெண் பாறகடல நாடு தூஉம
செந்தமிழ அமிரதம திரண்டெழ ற பொருட்டே."

வீறகு கடலுடுத்த வியன்கண் ஞாலத்து வழ
ங்கப்பெறும பாஷைகள் தொளாயிரத்துக்குக்குறை
யாதவை. இவற்றுள் நாகரிகம வாய்ந்த மக்களால
பேசப்பட்டுப் பண்டைக்கால முதல இன்றுவரை
உயர்ந்திருக்கும சீரியமொழிகள் இபிரேயம கிரீக,
லத்தீன சமஸ்கிருதம, தமிழ்என்ற ஐந்துமென
விலியம் ஹண்டர் முதலிய ஆராய்ச்சியாளாகள
அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். இவற்றுள் ஒன
றாகிய தமிழமொழியானது உலகவழக்கு, நூலவழ
க்கு எனனுமிருவழக்குச சிறப்புடையதாகிக கன
னடம, தெலுங்கு, மலையாளம, துளுவாதிய உண
ணாட்டு மொழிகளுக்குத தாயகமாகவும நினறு பிற
மொழியினுதவியின்றியே தனித்தியங்கும வன
மையையுடையது. இம்மொழி, இலக்கண நூலகள
செய்யப்பெறுதற்கு வெகுகால முனனரே மக்கள
வழக்கிற் சிறந்து பொருளிலக்கிய வழக்குக்களைக்
கொண்டு சிறந்திலங்கிப்பது என்பது, 'பழந்திரா



விடர்கள்' என்ற விபாசத்தில் ஸ்ரீ E. S. W

சேஷகிரிராஜா அவர்கள் L. L. B. M. R. A. S.
எழுதிய குறிப்புகளால் விளங்குகிறது

ஓர் நாட்டின் அறிவு நாகரீக வளர்ச்சியை ஆ
ராய்தற்கு, அந்நாட்டின் அரசியல் முறை, வாணி
பம் முதலியவை கருவியாயிருப்பன போல, அந்நா
ட்டின் மொழி திட்பநுட்பஞ்செறிந்த இலக்கிய
இலக்கண அமைதியுற்று விளப்பமுற்றிருப்பதும்
கருவியாம். இம்முறையில் நந்தாய் மொழியாகிய
தமிழ் பிறமொழிகளிற் காணப்பெறாத பொருளில
க்கணச் சிறப்புடையதாயிருப்பது கவனிக்கத்தக்
கது. பொருளிலக்கணம் அகம் புறம் என்றிரு
வகைத்து. பட்டாங்கு யாண்டும் ஒப்பநிகழ்தலால்
பொருளிலக்கணம் எம்மொழிக்கணும் உளதே
னும் இலக்கணநூலாகச் செய்து கற்றறியப்படுவது
தமிழ்மொழியொன்றிற்றான் தமிழ்மொழிக்கண்
பொருளிலக்கணக்கேள்வியான் கற்போர்க்கு நூற்
பொருள்கள் நன்குணரப்பட்டு எஞ்சாது சுவைபய
ந்து நிற்கின்றன. இதனான் எம்மொழியினும் தமி
ழ்மொழி இனிதெனவும் நறுந்தமிழ், கனிதமிழ்
எனவும் சான்றோரால் பாராட்டப்படுவதாயிற்று.
மேலும் வேறுமொழியினுதவியின்றித் தனித்தியங்
குமியல்புடையது என்பது; "தமிழ்மொழிப்புண



ர்ச்சிக்கட்படும் செய்கைகளும் குறியீடுகளும் வினை
க்குறிப்புவினைத்தொகை முதலிய சில சொல்லிலக

கணஙகளும், உயர்திணை அஃறிணை முதலிய சொறபாகுபாடுகளும், குறிஞசி வெட்சிமுதலிய திணைபபாகுபாடுகளும, அவற்றின பகுதிகளும வெணபாமுதலிய செய்யுளிலககணமுமம, இன்னோரன்ன பிறவும, வடமொழியிற பெறபபடா" என வடமொழி தெனமொழிககடலகிலகணட மாதவர் சிவஞானமுனிவர்கூறுவதாலுணரபபடும. ஆகவே, தமிழ்மொழி இனிமையுடைய மொழியென்பதும தனிதியஙகும தனிமொழியென்பதும பெறப்படுவதாம.

எஙகிலத்து மக்கள் தமமொழியை வளர்ககினறார்களோ அஙகிலதது மககளே ஙமுகதயர்நதவராவர். இவவுண்மை மேனாடடு நாகரிகமககளிடததும, ஜபபானியரிடததும, ஙஙநாட்டில வஙகாளிகளிடததும ஆநதிரரகளிடததும் கண்கூடாம. இவர்கள யாவரும தததம மொழியிலுள்ள நூலகளைக கிரமமாக ஆராயநதும, காலந்தோறும பயன்படத்தக்க நூலகளையியற்றியும், தம்மொழியிலிலலாத நூலகளைபபிறமொழிகளினின்றும மொழிபெயர்த்தும, முன்னுளிருநதருகிய பயனபடுநூலகளைத தேடிப்பிரசுரித்ஞ்செய்தும், வானசாத்திரம், இரசா



யன சாததிரம, பிரகிருதிசாத்திரம முதலியவைகளைத் தாயமொழியிலேயே பயிலத்தகக விததியா

மாகசசேகரிதது எழுதுவோரால எறபட்ட காலி
கித அபததஙகளை வான முறைபறிஞாகளைக கொ
ண்டு களைநது தமிழலது கண்டு மகிழமவண்ணம

அசசுவாகனமேறறி யலஙகரிததுச சிறபபளித்த
ஸ்ரீமாந பொ. பாண்டித்துரைத்தேவரவாகளின் தமி
ழபபறறு நமமாலும நமவழித்தோனறலகளாலும
மறககபபடாததொன்றன்று? நமது சீரபதமிழ்
மொழி இயல இசை நாடகம எனனும முததிறம
வாயநத இயலபினையுடையது இயறறமிழென்
பது உலகவழக்கு செயயுளவழககு எனனும் இரு
வகைவழககினும இயஙகுகினற இலககிய இலக
கண நூலகளின தொகுதியெனக. இசைததமி
ழெனபது சொலலினிசைததுப பண்ணியஙகு
மாறு தாளததின வரையறுததுப பொருளமைதி
பெறப பாடும பாடலும, இசையினவழிபாகபபண்
பிறககும பாடலுமாகிக கேட்பார்ககினபம பயக்
கும பான்மைபது. நாடகததமிழென்பது இயலும
இசையும உரையும பொருநதிககாணபார்ககுங கே
ட்பாாககும காட்சியினபமும கேளவியின்பமுமளி
ததுப பொருடபெறககதைதழுவி வரும கூத

(xvii)

தவிகற்பமுடையது. இமமூவகையிலக்கணமும்
அகத்தியனார்தென்னாட்டைததறகு முன்னரேதமிழ்
நாட்டில் நூலளவாக வழஙகியவெனினும், அந்
நூல இன்னினனபெயருடன் வழஙகிறறென்பது

தெறறென விளங்காதொழிந்தமையால் அகத்தியர் செய்த இலககணமே முத்தமிழிற்கு முதனூலாக கபபெறப்பட்டதென்க.

இவவகத்தியம், வேறெம்மொழியினும் இது வரை காணப்படாத 1200 சூத்திரங்களியன்றதெ ன்று கருதப்படுமாயின், இதறகு ஏற்றஇலக்கியம் தமிழ்நாட்டில வெதகாலத்திறகு முன்னிருந்தே ததும்பித்தழைததசசிறந திருககவேண்டு மெனபது,

"இலககணம் என்ப திலககிய முறையுற
வைதத தென்று வழங்கப படுமே"
"இலக்கியம இனறி இலககணம இன்றே
எள்ளின் றாகில எண்ணெயும இன்றே
எள்ளினின் றெண்ணெய் எடுப்பது போல

இலக்கி யத்தினினின் றெடுபடும் இலக்கணம்"
என்ற இவ்வாசிரியர் சூத்திரங்களாலெளிதில உ ணரத்தக்கது இவவகத்தியம தலைசசங்கத்துக்கும் இடைசசங்கததுக்கும இலக்கணமாகச சிறநதது.

(xviii)

ஆயிரக்கணக்கான சூத்திரங்களினமைந்து கற்பா ர்க்கருமையுடையதாகி நின்ற அவ்வகததியத்தை ஆசிரியர்பால கறறுணர்நத தொலகாப்பிய முனிவர் முதலிய பன்னிருமாணவரும, யாவரும எளிதிற் கறறின்புறுமாறு தததம பெயரான் வெவ்வேறிலக்

கணம இயறறியதுடன், பனனிருவரும சேர்நது பன்னிருபடலம என்னும நூலொனறும் இயறறினூர்கள. இவறறுள திரணதூமாககினிமென்னும் இயறபெயரையுடைய தொலகாபபியனாாற் செய்யபபெறற இலககணமே தொலகாபபியம் எனபபடும. இது அகததியததுடன் இடைச்சங்க காலத் திலக்கண மாகப பொருநதி விளங்கியதுடன்,நாளிதுவரை தமிழுக்கோர் தனிசசுடாபோல விளங்கும் இலக்கண நூலும ஆகும. இது எழுதது, சொல, பொருள் என்னும மூனறதிகாரஙகளையுடையது ஒவ்வோர் அதிகாரமும தனிததனி ஒன்பதியல்களையுடையது. இயலகளின் வைப்புமுறையும அவை காணப்படும இடமும அவவவ்வதிகார மூதவிற பதிப்பிககபபட்டிருககும சூததிரததொகை வகைச செய்யுள்களாலும, உளளுறையாலும் உணரபபடும

இறைநாள, இயற்றமிழ் முதல் இலக்கண நூலாகசசிறநதிலககும இநநூறகு, உரையாசிரிய



ராகிய இளம்பூரண அடிகள, சேனாவரையர், பேராசிரியர் கலலாடர், நச்சினார்க்கினியர் என்ற ஐவர் உரைவிரித்துள்ளார்கள். முதன்முதல் இவர்களில, அறிதறகரிதாகிய தொல்காபபியககடலைத் தம்மதி

வழிகொண்டுகிடைத்த முதல் இலக்கணவுரை தம அளித்த பெரியார்; இளம்பூரண அடிகளாவர். இவர் உரைப்போக்கைத் தழுவி நன்னூலியற்றிய பவணந்தியார் அந்நூலிற் சில சூத்திரங்கள் செய் திருப்பதாகச் சொல்லப்பெறுதலால் பவணந்தியார்க்கு முந்தியவராவர் நமதடிகள். இவர் தொல்காப் பியம் முழுமைக்கும் உரையியற்றியவரெனினும் எழுத்திற்கும் சொல்லுக்கும் பொருளில் முதலி ரண்டியல்களுக்கும் எழுதிய உரைகளே வெளிவந் துள்ளன. பழந்தமிழ் நூற்பதிப்பாளரும், சென்னைக்கு மாட்சிமிக்க வேல்ஸ்இளவரசரவர்கள் இவ்வரு டாசமபத்தில் விஜயஞ் செய்தகாலத்துப் பரிசில் அளிக்கப்பெற்ற தமிழ்ப்புலவர் நால்வரிலொருவ ருமாகிய மகாமகோபாத்தியாயர் ஸ்ரீ உ. வே. சாமி நாதையரவர்கள் பதிப்பித்துள்ள இசைப்பாவாகிய பரிபாடல் நூலிற்கிடைத்த 22 பாடல்களுக்குமேல் "ஆயிரம் விரித்த" "வானுறைமதி" என்னும் முதற் குறிப்புடைய பாடல்களிரண்டும் பரிபாடற் செய் யுட்களெனப் பொருளதிகாரச் செய்யுளியற்கு



இளம்பூரண அடிகள் இயற்றிய உரையிற் காட்டப் பட்டமேற்கோளான் விளங்கினமையின் பரிபாட லிறுதியிற் சேர்க்கப்பட்டன என்று குறிக்கப்பட் டிருத்தலால் இளம்பூரணவடிகள் இச்செய்யுளியல் போல, மற்ற இயல்களுக்கும் உரைசெய்திருப்பவ ரேகவே கொள்ளப்படுகிறது.

இவ்வுரையாசிரியருடைய கொள்கைகளைப் போற்றுமிடம் போற்றி உரையாற்றுமிடங்கட்குச் சமாதானமுங்கூறி உரையியற்றியவர் வடநூற்கடனிலைகண்டுணர்ந்த சேனாவரையர் என்பவர். இவர் சொல்லதிகாரமொன்றற்கே கற்றோர் பலராலும் போற்றப்படும் சிறந்த உரையியற்றியுள்ளார். இவர் உரையிற் சிலபகுதிகளை நச்சினார்க்கினியர் மறுத்துரைப்பதுகொண்டு இவரை நச்சினார்க்கினியர் காலத்துக்கு முற்பட்டவரென்னலாம். இனி பேராசிரியர் சொல்லதிகாரத்துக்கும், தொல்காப்பியம் முதலிய இலக்கண இலக்கிய நூல்களை அச்சிற் பதித்து யாவர்க்குமுதவிய புதுக்கோட்டை மாஜி ஜட்ஜ் ராவ்பகதூர் திருமான். சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள் பி. எ. பி. எல். ஆல், நச்சினார்க்கினியருரையென்று அச்சிடப்பட்டிருக்கும் பொருளதிகாரத்தில மெய்ப்பாட்டியல, உவமவியல, செய்யுளியல, மரபியல, என்பவற்றுக்கும் உரைசெய்தவர்

(xxi)

என்பது சேதுசமஸ்தான வித்துவான் ஸ்ரீரா. இராகவையங்காரவர்கள், மதுரைத்தமிழ்ச்சங்கச் செந்தமிழ்ப்பத்திரிகையை நடத்தியகாலத்தெழுதிய வியாசங்களாலும் அவர்களாராய்ச்சியுடன் வெளிவந்திருக்கும் செய்யுளியல் முகவுரையாலும் விளங்குவதாம். ஆத்திரேயன் பேராசிரியன் எனப்படுதலால், இந்நூன்முகத்துப் பதிப்பிக்கப்பட்டிருக்கும் பொதுப்பாயிரம் செய்தவரும் இவரே எனக.

இவரே, திருச்சிற்றம்பலக்கோவையாருக்கும், குறுந்தொகையில் முதல் 380 செய்யுள்களுக்கும் உரை செய்த நல்லறிவுடைய தொல்பேராசிரியர். இவர், கி. பி. நானகாவது நூற்றாண்டில் புத்தரைவென்ற வராகச்சொல்லப்படும் சைவசமயாசாரியர் நால்வருள் முதல்வராய வாதவூரடிகளென்னும் ஸ்ரீ மாணிக்கவாசகசுவாமிகளருளிய திருச்சிற்றம்பலக் கோவையாருக்குரைசெய்திருக்கின்றவராதலால், மாணிக்கவாசகர் காலத்துக்குப்பிந்தியவரும், இவர் உரைவிரிக்காதுவிட்ட குறுந்தொகை இருபது செய்யுள்களுக்கு உரையிட்டவராகிய நச்சினார்க்கினியர் காலத்துக்கு முந்தியவருமாவர்.

கல்லாடர், கல்லாடக்குடியிற் பிறந்தவர் இப்பெயருடன் இருவர் காணப்படுகின்றார். இவருள் முன்னவர், அம்பர்கிழானருவந்தைத், பொறையாற்



றுக்கிழான், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் ஆகிய மூவரையும் பாடிய கடைச்சங்கப்புலவர். பின்னவர், கி. பி. நான்காவது நூற்றாண்டிலிருந்த ஸ்ரீ மாணிக்கவாசகசுவாமிகளருளிய திருச்சிற்றம்பலக்கோவையாரின் கிளவிகளின் அருமைகளை விளக்குதற்கு நூறு அகவற்பாக்களாலாகிய கல்லாடம் என்னும் நூல்செய்தவர். இவரே சொல்லதிகாரத்துக்கு உரைசெய்தவரென்ப

இவர்செய்த உரை முழுமையுமகப்படுதறகிலலை. எனது கைவசமிருககும கிளவியாககவிருகது மற

றையாசிரியர் விருததியுரைகளுடன ஆராய்நது பினனர் வெளியிடப்பெறும். நச்சினர்க்கினியர் எனபவர் மதுரையில பாரதவாசர் கோத்திரத் துதித்தவர் தொலகாப்பியம எழுததுதிகாரத்துக் கும சொலலதிகாரததுககும பொருளதிகாரததில அகததிணையியல, புறததிணையியல, களவியல, கற் பியல, பொருளியல, செய்யுளியல, ஆகிய ஆறியல களுக்கும உரைசெய்துளளவரென்பது இப்பொ ழுது துணியப்பட்டுளளது எவரும நுழைநது காணமுடியாவண்ணம இருண்டுகிடநத தொலகாப் பியம் என்னும சாககறைபபொருளை இன்னவெ ன்று முதலில எடுத்துக்காட்டிய உரையாசிரியர் வழிப்புகுந்து அவர்வழீஇய வழியையும், அவரத



பற்றி அரியவுரை செய்த சேனவரையருரைப் போககையும மறுக்குமாறறலுடையவர் சிநதாமணி

கலிததொகை பத்துபபாட்டு, புறநானூறு திருக குறள் முதலிய சஙகநூலகளுக்குரை யெழுதியவர். திருககுறளுரையாசிரியர் பதினமருள நசசர எனப படுபவர இவரே. 'அகநூலுரையாசிரியரிற சிறநத டடமானவரெனறு சொலலப்படும பரிமேலழகர் காலததவர் தொலகாப்பியததில இருபததொனப தியலகளுக்குரைசெய்திருப்பவரும மேறகூறிய

உரையாசிரியர்களிற காலததாற பிறபட்டவரும

இவரே.

இவவைவநதுரையாசிரியாகருபபின், இறறைக குச்சுமார் 200 வருடஙகளுககு முன, இருமொழிப் புலவர் சிகாமணியாகசசிறநது கசசியபபமுனிவர் முதலிய பன்னிருமாணவர்களுககு ஆசிரியராகிக காஞசிபபுராணமாதிய பலநூலகளியறறிய சிவஞா னபாடியகர்ததா ஸ்ரீசிவஞான முனிவா 'தொலகாப பியபபாயிரமுதறசூததிரவிருததியும, 1914 ஞ் காலஞ்சென்ற மதுரைத தமிழ்சசஙகததுபபுலவ ரும, திருககுறள சண்முகவிருததி முதலியவை யியறறியவருமான, சோழவநதானூர் அரசஞசண முகனுர் தொலகாபபியபபாயிர விருததியும, (நூன மரபு விருததி) வெளியிடடுளளார்கள.

(xxiv)

இவ்வுரைகளில, எழுததைிகாரத்துக்கு நச்சி னர்க்கினியமும இளமபூரணமும் சுமார் 80-வரு டஙகளுககுமுன் சென்னைசசகல கலாசாலைததமிழ் பபுலமை நடததிய ஸ்ரீ மழவை. மகாலிங்கையரவர் களால முதலமுதல அசசிடப்பெறறன. தொலகாப் பியமுழுமையையும உரையுடன் பதிபபித்துவைச் செய்யவிருமபிய ஸ்ரீ சி. வை. தாமோதரமபிள்ளை யவர்கள சொலலதிகாரத் துககுசசிறநத வுரையாகக் கருதபபடும சேனுவரையததை யாழ்பபாணதது நலலூர் மகாவிததுவசிரோமணியும சைவசிததாந தபபிரவாததகருமான ஸ்ரீ ஆறுமுகநாவலரவர்க ளைககொண்டு பரிசோதிதது 1868-ல பதிபபிததார்

கள். பின்னர் 1885ல் பொருளதிகாரத்துக்கு நச்சினார்க்கினியத்தைப் பல பிரதியொப்புநோக்கிப் பதிப்பித்து வெளியிட்டார்கள். இதற்கு முன் மழவை மகாலிங்கையர் அச்சிட்ட எழுத்ததிகார நச்சினார்க்கினியம் கிடைத்தற்கருமையாக அவ்வதிகார நச்சினார்க்கினியத்தையும் 1891-ல் வெளியிட்டுத் தொல்காப்பியத்துக்கு நச்சினார்க்கினியமாவது முற்றிலும் யாவர்க்குங்கிட்டுமாறு செய்தார்கள். இவர்கள் இங்ஙனம் செந்தமிழ்த்தொண்டை மேற்கொள்ளாதிருப்பார்களாயின், "பல்காற்பழகினுந் தெரியா உளவேல், தொல்காப்பியந் திருவள்ளுவர் கோ



வையார், மூன்றினும் முழங்குந்" என்று சிறப்பித்துரைக்கப்பட்ட 'இலக்கணக்கொத்தாசிரியர் மொழிக்கிணங்க, சங்ககாலத்திலக்கியங்களாகிய எட்டுத்தொகை பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு முதலிய நூல்களுக்கு இலக்கண நூலாக விளங்கும் தொல்காப்பியத்தை முழுமையும் நம்மில் எவரும் கண்டுகளித்து, தொல்காப்பியனாரால் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் கூறப்பட்டுள்ள சரித்திரக்கூறுகளையும், மக்கள் இயல்புகளையும், பண்டைவழக்க ஒழுக்கங்களையும் தெரிந்துகொள்ள இயலாதென்க.

சிலவருடங்களுக்குமுன் சென்னைப் போலீஸ் அஸிஸ்டெண்டு கமிஷனர் ஸ்ரீ எஸ். பவானந்தம்

பிள்ளையவர்களால பொருளதிகார நச்சினார்க்கினி யம வெளியிடபபட்டிருப்பதுடன்; வக்கீல வ. உ. சிதமபரமபிள்ளையவர்களால் அகத்திணை புறததி ணையியலகளின இளமபூரணம் அச்சிடப்பட்டுள ளது. மதுரைத்தமிழ்ச்சஙகபபிரசுரமாகச செய்யு ளியலுக்கு நச்சினார்க்கினியமும் இளமபூரணமும் ஸ்ரீ ரா இராகவையங்காரவர்களால பதிப்பிக்கப படடுள்ளன.'

சிலவருடங்களாக, எனது இயற்றமிழ் நண பர்கள்டலர் தொல்காப்பியம எழுத்ததிகாரம நச்



சினார்க்கினியம், சொலலதிகாரம் சேனாவரையர், ஆகிய இரண்டு புததகங்களும சங்கததமிழ்ப்பரீட் சைக்குக் குறிக்கபபட்டிருபபினும, அவை எங்கும கிடைத்தறகில்லையென்றும, அவற்றைப்பழஞ்செய் யுள் நூலகளின அருமணிகளைத தொகுக்குப்பதி ப்பிததுவரும் தாஙகள தொல்காப்பியததிற கிடை யாத பகுதிகளை அச்சிட்டு வெளிபபடுததின பேரு தவியாகவிருக்குமெனறும கூறினார்கள இவ்வாக்கு சொல்லுக்கியைநது உரையுடன பதிப்பிப்பதாயின ஆயிரககணககான ரூபாய செலவு பிடிப்பதாகவும அஙஙனம ஏதாவதொருபகுதியைப் பதிப்பிக்கலா மென்று முறபடுதல புததகததை யச்சிடுமுயற்சியை யே பொருளாகமதிக்கககூடியபொருளாளர்களாலே யே கூடியகாரியமெனபதாகவும உணர்நத யான், தொலகாப்பியமூலததையேனும சூததிரநூதலபொ

ருட்குறிப்புடன் பதிப்பித்தால், தாய்மொழிப்பற்
றும் உணர்ச்சியும் மிகுந்துவரும் இக்காலத்தில் தமி
ழறிஞர் அதனை விருப்புடனேற்றுப் போற்றுவார்
களென்று கருதலானேன். இக்கருத்தை எனது
நூல்களை வெளியிட்டுவருகின்ற ஸ்ரீ பி. நா. சிதம்பர
முதலியார் அன் கோ ஏஜண்டு, திருவாளர் மு. கிரு
ஷ்ணபிள்ளையவர்களிடம் தெரிவிக்க அவர்களும்
உயரிய இலக்கணநூலாகிய தொல்காப்பியத்தின்



மூலத்தையாவது இப்பொழுது வெளியிடுவோம்
அதற்கானவற்றைத் தயாரியுங்கள் என்று பதில
ளித்தார்கள். இவ்வித இணக்கமொழி எனதுளத்
தைக்களிகொள்ளச் செய்யவே, கிடைக்கக்கூடிய
தொல்காப்பிய நச்சினார்க்கினியத்தை ஆதாரமாகக்
கொண்டு மூலசூத்திரங்களை நுதல்பொருளுடன்
பிரதிசெய்ய ஆரம்பித்தனன்.

பிரதி தயாரிக்குங்காலத்தில் தொல்காப்பியச்
சூத்திரங்களின் தொகை இத்துணையென வரை
யறுக்கப்பட்டுள்ளதா என்று கவனித்தபொழுது
எழுத்ததிகாரச் சூத்திரங்கள் இத்துணையென்ப
தைக் குறிக்கும் வெண்பாக்களும், சொல்லதிகாரச்
சூத்திரங்கள் இன்னின்ன இயல்களுக்கு இத்துணை
யெனக் குறிக்கும் விருத்தமும் காணப்பட்டன
வன்றி, பொருளதிகாரச் சூத்திரங்களித்துணை
யென்பதையாவது தொல்காப்பிய முழுமைக்கு
முரிய சூத்திரங்கள் இத்துணையென்பதையாவது
காட்டும் செய்யுள் காணப்படவில்லை எனினும், இத

ளைக்குறித்தசசெய்யுளகள சொலலபபெருமளிரா, எட்டுபபிரதிகளில ஒரோ வழி காணபபடலாமெ
ன்று நினைததது; பழ நூறகளையாராய்சசி செய்து வருநதன்மையிலுள்ள செநதமிழ்ததொகுதிகளைப் பார்வையிடலானேனன. செநதமிழததொகுதி 2,
(xxviii)
ப்குதி 4-ல் 'ஆராய்சசி' என்ற தலைப்பில் வெடி
பததிராசிரியர், ஸ்ரீ இராகவையங்காரவாகள், சகததிறகுக் கிடைத்த தொலகாபபிய ஏட்டினிறுதியில இநநூல் 170-ம் பக்கததில பதிபபிக்கபபட்டிருககும, வெண்பாககள இரணடும காணபபட்டனவெனறும, அதன்படி பொருளதிகாரச சூததிரஙகள 665 எனறும, தொலகாபபிய முழுதுக்குமுளள சூததிரங்கள 1610 எனறும விளஙகுமெ
றனவெனறும், தாமோதரமபிள்ளையவாகள வெளிபபடுததியுளள பொருளதிகாரததில சூததிரங்கள 666 ஆககாணபபடுகினறதெனறும, தொலகாபபிய முழுதுககுமுளள சூததிரஙகள 1612 ஆககாணபபடுகின்றதென்றும குறிபபிட்டிருபபதை யுணர்நததும, முதலில பொருளதிகாரச சூத்திரங களையெண்ணிக கணக்கிடலானேனன. அஙஙனம எண்ணிவருமபொழுது செய்யுளியலில ஓர் சூததிர எண்ணுககு அடுததுபபோடபபடும சூததிர எண் அவவெண்ணுககொனறதிகமாகப பதிபபிக்கபபட்டிருநதமை தெரிநது, அவவசசுபபிழையை ததிருததிச சூததிரஙகள ஏடடு வெண்பாபபடி

665 ஆக இருபபதுணர்நது மகிழ்நதேன். ஒன றிறிருததங்கண்டயான், தொலகாபபிய முழு மைக்குமுரிய சூத்திரவெண் 1610 பிழைபடுவ



தறிநது அதனுண்மையை ஆராயப்புகுநதனன், எழுததநிகாரசசூததிரங்கள மொததம 483 என இநநூல 6 ம பக்க வெணபாவாறகியைய இருநத மையால, சூததிர மாறுபாடுகள, சூததிர மொத் ததொகை வரையறைசசெயபுளிலலாக சொல லநி- -ததிலதான ' இருகக வேணடுமென்றெண் ணிய ஏிளயவர்களால 'பதிபபிககபபட்டிருககும சொல-ச்சசினார்ககினியம், சேனாவரையம இரண டையு ா வைததுததனிததனி இயலகளின சூத்தி ரததொகைகளை ஒப்பு நோக்கிபகாலதது, கிளவி யாக்கம், வேறறுமை மயஙகியல, உரியியல இவ வியலகளின் சூததிரததொகை கூடியுங குறைநது மிருககககண்டனன. இவவேறறுமை; உரையா சிரியா, கருதது மாறுபாட்டான ஒரு சூததிரத் தின முதலடியையோ ஈறறடியையோ தனிச்சூத் திரமாக்கி யுரையெழுதிப போநதமையாலாயது எனபது விளஙகிறது. கிளவியாககம ருச (537) சூததிரத்தின் முதலடியாகிய ' ஒன றுவினை மருங கின் ஒன்றிததோனறும ' எனபதை நசசினாக் கினியர் தனிசசூததிரமாககியிருபபதையும வேற றுமை மயங்கியல கூகூ (599) சூததிரததைச்சேனு

வரையர் 598ன் இறுதியடியாகச் சேர்த்திருப்ப தையும் கண்டு இவற்றுள் 537ம் சூத்திரத்தைச்

(xxx)

சேனாவரையர் உரைக்கிணங்க ஒரு சூத்திரமாகவும் 598ன் ஈற்றடியாகிய 'வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்' என்பதை நச்சினார்க்கினியருரைக் கிசைய 599ல் தனிச்சூத்திரமாகவும் பதிப்பிக்கப் பட்டன. உரியியலில் 787ம் சூத்திரத்தில் "ஏ பெற்றாகும்" என்பதையும், 795ம் சூத்திரத்தில் "மாலை இயல்பே" என்பதையும் சேனாவரையத்தைப் பிரதி செய்தவரின் கரவழுவால் பிரித்தெழுதப்பட்டிருக்குமென்றுன்னி, நச்சினார்க்கினியருரைக்கிணங்கவே 787, 795ம் சூத்திரங்கள் சேர்த்துப் பதிப்பிக்கலாயினன். இவ்விதம் பொருத்தாதவிடத்துச் சொல்லதிகாரச் சூத்திரங்கள் மொத்தத்தில் 463 ஆகக்காணப்படுமன்றி, இயல்களின் சூத்திரத்தொகையும் வரையறுக்கப்படாது; தொல்காப்பிய முழுமைக்குமுள்ள சூத்திரத்தொகையும் 1611 எனவே ஏட்டுப்பாடு கெடுமாறாகக் கணிக்கப்படவேண்டுவதாம். இவ்விடர்ப்பாடில்லாதிருக்குமாறு கிளவியாக்கச்சூத்திரங்கள் 61 என்றும், வேற்றுமை மயங்கியற் சூத்திரங்கள் 35 எனவும், உரியியற்சூத்திரங்கள் 98 எனவும் வரையறுத்துச் சொல்லதிகாரச் சூத்திரங்கள் மொத்தம் 462 ஆகு

மாறு செய்தனன். இவ்வியைபுக்கிணங்க எழுத
ததிகாரச் சூத்திரங்கள் 483, சொல்லதிகாரச் சூத்



திரங்கள் 462, பொருளதிகாரச் சூத்திரங்கள் 665, என்று வரையறுக்கப்பட்டு, தொல்காப்பிய மொத்தச் சூத்திரங்கள் **1610** என முடிவு செய்யப் பட்டிருக்கின்றது.

இம்மூலப்பதிப்பில் உரையாசிரியர்களாலும் பதிப்பாளர்களாலும் சுட்டப்பட்ட பாடபேதங்கள் அன்னவர் பெயர்க்குறிப்புடன் குறித்தலைப்பில் அடியிற் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இதில் செய்யுளியல் மூலத்திற்குக் காட்டப்பட்டிருக்கும் பிரதி பாடங்கள் ஸ்ரீ ரா இராகவையங்காரவர்கள் பதிப்பிலிருந்தும் குறிக்கப்பட்டவை. பாடபேதக்குறிப்புடனும், சூத்திரந்தலைப்பொருளுடனும் வெளியிடப்படும் இம்மூலப்பதிப்பு பழம் பதிப்பாளர்க்கும், மேற்கோள் எடுத்துக்காட்டுவோர்க்கும், மன்னும் நுண்ணிச் சிந்தனைசெய்வார்க்கும், பெரிதும் பயன்படக்கூடுமென்றெண்ணுகிறேன். இந்நூலிலுள்ள 'உரியியல்' 'மரபியல்' செய்யுளியல் தலைச் சூத்திரங்கள் தமிழறிஞர்களால் மண்ணுஞ் செய்யப் பெறுதல் நன்மையுடைத்து. இப்பதிப்பு; 'தொல்காப்பியமூலம்' ஒன்று சுத்தமாகவும் திருத்தமாகவும் பதிப்பிக்கப்பெறின், யாவரும் தமிழ்த்தொல

இலக்கணசூத்திரங்களின் தன்மைகளையாவது
கண்ணுற்றுக்களிப்படைவார்கள் என்று தமிழவை



தோறும் தமிழெழாவியெழுக்துச்சிறப்பனைத் விதந்
தெடுத்தோதிவரும் தமிழறிஞர்குழுத்தலையாவ
குப்பிரண்டிங் எஞ்சினீர் திருத்தகு P. V. மாணிக்க
நாயகர் அவர்களுடைய கருத்தைத்தழுவிவெளி
வந்ததாகும் இப்புத்தகமெவ்வொரு புத்தகசாலைக்
கும், சங்கத்துக்கும், பள்ளிக்கூடத்துக்குப் மிகவும்
இன்றியமையாதது

இந்நூற்கு ஆங்கிலமுன்னுரை யளித்துச்
சிறப்பித்த, மதுரைத்தமிழ்ச்சங்கக் கௌரவக்காரி
யதரிசியும், உயர்தரநியாயவாதியும், சென்னைச்சட்
டசபையுறுப்பினருமாகிய, ஸ்ரீமாந் T. C. சீனி
வாசையங்காரவர்களுக்கும், சிறப்புரையுதவிய,
மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலைத்தலைமைத்தமி
ழாசிரியரும் செந்தமிழ்ப் பத்திராசிரியருமான
ஸ்ரீமத். திரு நாராயணையங்காரவர்களுக்கும், சிறப்
புப்பாயிரமளித்த மதுரைத்தமிழ்ச்சங்கத்தலைவர்
மறைத்திருவாளர். ம சுந்தரபாண்டிய ஓதுவார்
அவர்களுக்கும் இப்பதிப்பை விரைவில் வெளிப்
படுத்துமவண்ணம் தூண்டி பிரதிசெய்யுங்காலத்
தும் பதிப்பிக்குங்காலத்தும் தமது தேகசிரமத்
தைப்பொருட்படுத்தாது உடனிருந்தொப்பு நோக்
கியுதவிபுரிந்த மதுரைத்தமிழ்ச்சங்கக் கலாசாலைத்
தமிழாசிரியரும் எனது அரியநண்பருமாகிய கவி

ராயர் சு. நல்லசிவன் பிள்ளையவர்களுக்கும் எனது உளமுவந்த நன்றியைச்செலுத்துகிறேன்.

எனது இலக்குமிராம் கோவை மணிகளாரை யும் அச்சிட்டு வாசித்துமகிழ்ந்து, அதன் முழுவது மணிபாகவெளிப்படும இதனை விரைவில் அச்சிட்டுலவசசெய்யுமாறு ஊக்கிய பி. நா. சிதம்பர முதலியாரவாகள இவ்விலக்கணமணியைக் கண்டு ளிகருமுன விண்ணுட்டின் விருநதினராகச சென றமையின், அவருடனபிறப்பினராயிருநது புததக பரிபாலனபபுரிநது எனககு ஊக்கமுதவி வரும திருவாளா-ப். நா. தங்கவேலு முதலியார வாகளுககும், ஷை புததக வியாபார ஏஜண்டும காலததிறகியைநத நூலகள்பல தொகுததுதவு மாறுதுணைடி நனபணிகள நிலவுறச்செய்பவரு மான சைவகதிருவாளா. மு. கிருஷ்ண பிள்ளை யவாகளுக்கும், சுததமாகவும் திருத்தமாகவும் அச்சிட்டுதவிய மதுரை மீனாட்சி விலாஸம் பிரஸ் சொந்தககாரா மு. அழகர்சாமிச்செட்டியாாக்கும் எனது மனமாரநத வநதனத்தைத்தெரிவித்துக் கொள்கின்றனன்.

எனது கலாசாலைக்காரியங்களுக்கும் பத்திரிகை வேலைக்குமமத்தியில பதிபபிக்கப்பட்ட இப் பதிப்பில அயர்வாலும தளாவாலும் ஏற்பட்ட சில

பிழைகளைப்பிழைதிருத்தமாகச்சேர்த்து வாசிப்போரை அதற்கிணையத்திருத்திக்கொள்ளுமாறு கஷ்டப்படுத்தாமல் அச்சிலவற்றை யானே கையாற்றிருத்தியுள்ளேன்.

இப்புதுமுறைப்பதிப்பைத் தமிழ் நாட்டிலுள்ள மக்களியாவரும் வாங்கி வாசித்துப்பயனடைவதுடன், இத்தகைய வேறு நன்னூல்களையும் பதிப்பிக்கும்வண்ணம் வேண்டுவன புரியுமாறும் அன்னாரைகளை வேண்டிக்கொள்கின்றனன். ஒன்றுக்கும் பற்றாத என்னையும் போறிஞர்செய்த பெருந்தொண்டர்களாக்கி இத்துணை அறிவும் ஆற்றலுமளித்த ஆலவாயவிர்சடைக்கடவுள் திருவடிமலரை இடையறாது நினைந்து வணங்குகின்றேன்.

| | |
|---|---|
| நாதமந்திரம்<br>ஆநந்தபதி ௵<br>வைகாசிமீ க௮உ | பு. சிதம்பரபுன்னைவனநாதன்,<br>தண்டமிழ்த்தொண்டன். |



# ஆசிரியர் தொல்காப்பியனார் வரலாறு.



தொலகாப்பியனார் என்பவர் சமதக்கினி புத்திரர். இவரது இயறபெயர் திரணதூமாக்கினி என்பது. மதக்கினி பிருதுவமிசததர். இபபிருது கவியெனபபடும சுக்கிரன் குலததுதித்தவர். ஆக, கவி வமிசததவர் காவியர் என்றழைககப்பெறுவராசாயினர். இக்காவியா எனனும பெயா தமிழில காபபியர் என்று வழஙகப்பெறும். சமதககினியும அவர் குமாரரும பிருது வமிசததனராதலால பார்க்கவர் என்றும, கவி வமிசததினராதலால காவியர் என்றும அழைககபபடுவா. பழமை பற்றி இக்குடி வடமொழியில விருத்த காவிய குலமென்றும், தமிழில தொலகாப்பியக்குடியென்றும் சொலலபபெறும். தொல்காப்பியத்தினைச்செய்தவராகிய திரணதூமாக்கினி தம பெயரைக்குலப்பெயராகவே விளங்கச்செய்தலால் தொல்காப்பியர் என்றழைக்கப்பெற்றனர். இவருடன் பிறநதவர் பரசுராமர் என்ப.

இவரது ஆசிரியரும் உடன்பயின்றரும் :— இவரது ஆசிரியராக அகத்தியனார் விளங்கினரென்பது

“ வீங்குகடல் உடுத்த வியன்கண் ஞாலத்துத்
தாங்கா நல்லிசைத் தமிழ்க்குவிளக்காகென
வானோர் ஏத்தும் வாய்மொழிப் பல்புகழ்
ஆனாப் பெருமை அகத்தியன் என்னும்
அருந்தவ முனிவன் ஆக்கிய முதனூல்
பொருந்தக் கற்றுப் புரைதப உணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப்பியனும்

என்னும் பன்னிருபடலப்பாயிரத்தானும், இவரு டன் பயின்ற ஒருசாலை மாணாக்கர் பன்னிருவரெ ன்பது; இப்பன்னிருபடலத்தின் வழிநூலாக வெண்பாமாலையியற்றிய ஐயனாரிதனார்

“ மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சால் முனிவரன்
தன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த

என்று பாயிரஞ்சொல்லியிருத்தலானும் விளங்கும். மேற்கூறிய பன்னிரு மாணவர்களுள்வர், தொல் காப்பியத்தை நிலந்தரு திருவிற் பாண்டியன் அவைக்களத்துக் கேட்டுக்குற்றமின்றெனக்கூறுந் தன்மைச் சிறப்புப்பெற்ற அதங்கோட்டாசிரியர், தொல்காப்பியப் பாயிரஞ்சொற்ற பனம்பாரனார்;

செப்பூட்சேய், வையாபிகர், அவிநயர், காக்கைபா டினியா, தூராலிங்கர், வாய்ப்பியர், கழாரம்பர், நற் றத்தர், வாமனர், தொல்காப்பியர் எனபவர்.

ஆசிரியா காலம். இவர், குறுமுனி, தமிழ்முனி அமரமுனி என்று சிறப்பித்தோதப்படும் அகத் தியனாரிடம் கலைபயின்றாரெனப்படுதலால் அவ்வக த்தியர் காலத்தவராவர். 'அகத்தியனாரோ தலைச் சங்கத்துப்புலவராக விளங்கியபின இடைச்சங்கத் தும் தொல்காப்பியர் தியருடன புலவராக விளங் கியவா. இவா காலத்து இவாாசிரமத்து விஷ்ணு அவதார புருடராகிய ஸ்ரீ இராமர் வந்து தரிசித்து அருள பெற்றுச்சென்றாரென வான்மீகி கூறுதலா னும், சீதையைத்தேடித தென்றிசைபோய அநு மானுக்கு இடைச்சங்கமிருந்த கபாடபுரத்தின் சிறப்புகள வால்மீகத்திறசொல்லப்பெறுதலானும், அரசா குலத்தை அழித்துவந்த பரசுராமன இரா மருக்குத்தோற்ற பின தவத்திற புககானென்று கூறுதலானும், காவிரிப்பூம்பட்டினத்தரசன காந் தன என்பானோடு பரசுராமன் போர குறித்துவரப் பயந்த காந்தன அகத்தியனபாற சரணடைந்துய்ந் தானென்று கூறுதலானும், இராமருக்கு முறகால த்தானென்று கருதப்படும் காந்தன காலத்துக்கு முன்னரே அகத்தியா தென்றிசைப்போந்து தமிழ

மூதநூலளித்துப் பன்னிரு புலவர்க்குங் கலைமுத
ளித்தனரென்க. ஆகவே தொல்காப்பியர் தலைச
சங்க காலத்திறுதியிலும் இடைசசங்க காலத்தி
லும் இருநதிருக்கக்கூடியவர் என்பது புலனும்.
இடைசசகக காலம கிறிஸ்து பிறகருமுன் நாலா
யிரம வருடங்களுககு முன்னரென்று திருவாளர்.
தா. பொன்னம்பலம்பிள்ளையவர்கள் எம். ஆர். ஏ.
எஸ். முடிவு செயதிருபபதால அவர் கணககின்
படி, இறறைக்குசசுமார 6000 வருடஙகளுக்கு
முன்னிருநத இடைசசங்கததின இலககணமாகப
பயினற இது, அதறகு வெகு காலமுறபட்ட தலைச
சங்க காலததில் அரஙகேறறபபட்டதெனக இவ்
வாசிரியரைபபறறிய விரிவான ஆராயச்சி அறிஞ
ரால காலவளர்சசிபிற காணபபடும ஆதாரங்களைக
கொணடு செய்பபடவேண்டுவதாம.



உ

# தொல்காப்பியம்.

## உள்ளுறை.

---


| பொருள் | பக்கம் | பாடல்எண் |
|---|---|---|
| ஆங்கில முகவுரை முதலியன | ... | .... |

| | | |
|---|---|---|
| பதிப்புரை | ... | ... |
| ஆசிரியர் வரலாறு | ... | ... |
| சிறப்புச்செய்யுள்கள் | 1 | 7 |
| சிறப்புப்பாயிரம் | 3 | 1 |
| பொதுப்பாயிரம் .. | 4 | 1 |
| எழுத்ததிகாரச் சூத்திரத் தொகைவகை | 6 | 2 |


எழுத்ததிகாரம் ஒன்பதியல்கள் :—


1 நூன்மரபு ...

2. மொழிமரபு ...

3 பிறப்பியல் ...

4. புணரியல் ...

5. தொகைமரபு ...

6, உருபியல் ...

7. உயிர்மயங்கியல ...

8. புள்ளிமயங்கியல ...

9 குற்றியலுகரப்புணரியல

சொல்லதிகாரச்சூத்திரத் தொகைவகை }

| | |
|---|---|
| 7. | 33 |
| 12 | 49 |
| 19 | 20 |
| 23 | 40 |
| 31 | 30 |
| 38 | 30 |
| 44 | 93 |
| 59 | 110 |
| 74 | 78 |
| 83 | 1 |

சொல்லதிகாரம்—ஒன்பதியல்கள்:—


| | | | | |
|---|---|---|---|---|
| 1. | கிளவியாக்கம் | .... | 89 | 61 |
| 2. | வேற்றுமையியல் | ... | 100 | 22 |
| 3 | வேற்றுமை மயங்கியல் | | 105 | 35 |
| 4. | விளிமரபு | ... | 112 | 37 |
| 5 | பெயரியல் | ... | 118 | 43 |
| 6 | வினையியல் | ... | 127 | 51 |
| 7. | இடையியல் | ... | 137 | 48 |
| 8. | உரியியல் | ... | 145 | 98 |
| 9. | எச்சவியல் | ... | 157 | 67 |
| | பொருளதிகாரசூத்திர தொகைவகை | | 170 | 2 |

பொருளதிகாரம்—ஒன்பதியல்கள்:—

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | அகத்திணையியல் | ... | 171 | 55 |
| 2 | புறத்திணையியல் | ... | 182 | 36 |
| 3. | களவியல் | ... | 194 | 50 |
| 4. | கற்பியல் | ... | 209 | 53 |
| 5 | பொருளியல் | ... | 225 | 54 |
| 6. | மெய்ப்பாட்டியல் | ... | 235 | 27 |
| 7. | உவமவியல் | ... | 241 | 37 |
| 8. | செய்யுளியல் | ... | 247 | 243 |
| 9. | மரபியல் | ... | 288-306 | 110 |


தொல்காப்பியத்தின் 27 இயல்களிலுமடங்கிய சூத்திரங்கள் மொத்தம் 1610.

உ

திருச்சிற்றம்பலம்

# தொல்காப்பியம்.

## காப்புச்செய்யுள்கள்.

கணபதி

தன்றோள் நான்கி னொன்றுகைம் மிகூஉங்
களிறுவளர் பெருங்கா டாயினும்
ஒளிபெரிது சிறந்தன் றளியவென் னெஞ்சே (௧)

சிவபெருமான்

ஆதியிற் றமிழ்நூல் அகத்தியற் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போதமெய்ஞ் ஞான நலம்பெறற் பொருட்டே. (௨)

சரஸ்வதி

தவளத் தாமரைத் தாதார் கோயில்
அவளைப் போற்றுதும் அருந்தமிழ் குறித்தே (௩)

அகத்திய முனிவர்

சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப்
பரமா சாரியன் பதங்கள்
சிரமேற்கொள்ளுதும் திகழ்தற் பொருட்டே (௪)

தமிழ்த் தெய்வம்

மறைமுதற் கிளந்த வாயான்
மதிமுகிழ் முடித்த வேணி
இறைவர்தம் பெயரை நாட்டி
இலக்கணஞ் செய்யப் பெற்றே
அறைகடல் வரைப்பிற் பாடை
அனைத்தும்வென் றாரி யத்தோ
டுறழ்தரு தமிழ்த்தெய் வத்தை
உன்னினைந் தேத்தல் செய்வாம் (௫)

சங்கப்புலவர்.

தடவரை முனிவன் ஈன்ற
தமிழ்க்கொழுங் குழவி தன்னைப்
படர்வெயில் உமிழுஞ் சங்கப்
பலகையாந் தொட்டில் ஏற்றி
நடைவர வளர்த்து ஞால
நனந்தலை மறுகில் விட்ட
மடனறு புலமை யோரை
மனத்திடை நினைத்தும் அன்றே. (௬)

தொல்காப்பியர்

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியனடி
பல்காற் பரவுதும் எழுத்தொடு
சொல்காமருபொருட்டொகைஇகழ்பொருட்டே (௭)



# தொல்காப்பியம்.

அகத்தியர் மாணாக்கர் பன்னிருவருளொருவரான
ஸ்ரீபனம்பாரனார் இயற்றிய
சிறப்புப்பாயிரம்

— o —

வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்

புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்
நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்

தறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட் டாசாற் கரிறபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பலபுகழ் நிறுத்த படிமை யோனே.

௨

ஆத்திரையன் பேராசிரியன் அருளிய
பொதுப்பாயிரம்.

— o —

வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும

வானியா றன்ன தூய்மையும் வானியாறு
நிலம்படர்ந் தன்ன நலம்படர் ஒழுக்கமும்

திங்க ளன்ன கல்வியும் திங்களொடு
ஞாயி றன்ன வாய்மையும் யாவதும்

அஃகா அன்பும் வெஃகா உள்ளமும்

துலைநா அன்ன சமநிலை உளப்பட
எண்வகை உறுப்பின ராகித் திண்ணிதின்
மேவரு வாழ்க்கையும் தாஅ ளாண்மையும்

உலகியல் அறிதலும் நிலையிய தோற்றமும்
பொறையும் நிறையும் பொச்சாப் பின்மையும்
அறிவும் உருவும் ஆற்றலும் புகழும்
சொற்பொருள் உணர்த்துஞ் சொல்வன் மையும்
கற்றோர் நெஞ்சம் காமுறப் படுதலும்
இன்னோ அன்ன தொன்னெறி மரபினர்
பன்னருஞ் சிறப்பின் நல்லா சிரியர்
அறனே பொருட்பயன் இன்பெனும் மூன்றின்
திறனறி பனுவல் செப்புங் காலை
முன்னர்க் கூறிய எண்வகை உறுப்பினுள்
ஏற்பன உடைய ராகிப் பாற்பட

சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்தலும்

தன்னோர் அன்னோர்க்குத் தானப்பப் படுதலும்
செய்ந்நன்றி அறிதலும் தீச்சார் பின்மையும்
மடிதடு மாற்றம் மானம்பொச் சாப்புக்
கடிந்தோய் சிறப்பும் காலேவ காமம்

என்றிவை இளமையுமொன்றுவழி படுதலும
அறத்துறை வழாமையுங் குறிப்பறிந் தொழுகலும
கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலும
மீட்டவை வினவலும் விடுத்தலும் உரைத்தலும்
உடையராகி நடையறிந் தியலுநர்
நன்மாணாக்கர் என்ப மண்மிசைத்
தொன்னூற் புலமைத் துணிபுணர் வோரே.



உ

# தொல்காப்பியம்.

## எழுத்ததிகாரச்சூத்திரத்தொகை வகை.

---

### நேரிசை வெண்பா

நூலின் மரபுமொழிமரபு நுண்பிறப்பு
மேலைப் புணர்ச்சி தொகைமரபு—பாலாம்
உருபியலின் பின்னுயிர் புள்ளி மயக்கம்
தெரிவரிய குற்றுகரஞ் செப்பு.

எழுத்ததி காரத்துச் சூத்திரங்கள் எல்லாம்
ஒழுக்கிய ஒன்பதோத் துளவருநு— வழுக்கின்றிக்
காணூற் றிருகாற்பான் மூன்றென்று பாவலர்கள

---

உ

கடவுள் துணை

# தொல்காப்பியம்.

## எழுத்ததிகாரம்.

—.o:—

முதலாவது

### நூன்மரபு.

1 எழுத்துக்களின் பெயர்முறை தொகை

எழுத்தெனப் படுப,
அகரமுதல்
னகர இறுவாய் முப்பஃ தென்ப
சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே.

2 சார்பெழுத்துக்களின் பெயரும் முறையும்

அவைதாம்,
குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
ஆய்தமென்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன.



3 ஒரு மாத்திரையுடைய குற்றுயிர் இவையெனல்.

அவற்றுள்,
அ இ உ,
எ ஒ என்னும் அப்பால் ஐந்தும்
ஓரள பிசைக்குங் குற்றெழுத் தென்ப ௩

4 இரண்டு மாத்திரையுடைய நெட்டெழுத்து
இவையெனல்

ஆ ஈ ஊ,
ஏ ஐ,
ஓ ஔ என்னும் அப்பால் ஏழும்
ஈரள பிசைக்கு நெட்டெழுத் தென்ப. ௪

5. ஓரெழுத்தே மூன்று மாத்திரையாக
இசையாதெனல்.

மூவள பிசைத்தல் ஓரெழுத் தின்றே ௫

6 மாத்திரை நீளுமாறு கூறுவது.

நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி எழூஉதல் என்மனார் புலவர். ௬

7 மாத்திரைக்கு அளவு கூறுவது

கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட ஆறே. ௭

8 பன்னிரண்டுயிரிவையெனல்

ஔகார இறுவாய்ப்,
பன்னீ ரெழுத்தும் உயிரென மொழிப ௮



9 பதினெண்மெய்யிவையெனல்

னகார இறுவாய்ப்,

புஙினென் ணெழுததுட மெய்யென மொழிப. ௯

10 உயிர்மெய்யகளவு

மெய்யோ டியைபினும உயிரியல திரியா. ௰

11 தனிமெய்யெழுததளவு.

மெய்யின அளவே அரையென மொழிப. ௧௧

12 சார்பெழுததளவு

அவவியல் நிலையும ஏனை மூனறே. ௧௨

13 மகரக குறுககம.

அரையளவு குறுகல மகரம் உடைததே
இசையிடன் அருகும தெரியுங காலை. ௧௩

14 மகரவடிவம்

உடபெறு புளளி உருவா கும்மே. ௧௪

15 மெய்யெழுததியல்பு.

மெய்யின் இயறகை புளளியொடு நிலையல். ௧௫

16 எகர ஒகரத்தியல்பு.

எகர ஒகரத இயறகையும் அறறே. ௧௬

17 உயிர்மெய்யெழுத்தாகுமாறு

புளளி இலலா எலலா மெய்யும்
உருவுரு வாகி அகரமோ டுயிர்த்தலும்

10 எழுத்ததிகாரம்

ஏனை உயிரோ டுருவுதிரிந் துயிர்ததலும்
ஆயீ ரியல உயிர்த்தல ஆறே. ௧௭

18 உயிர்மெய் ஒலிக்குமாறு

மெய்யின் வழிய துயிர்தோன று நிலையே. ௧௮

19 வலலின மெய.

வல்லெழுத் தென்ப கசட தபற. ௧௯

20 மெல்லினமெய்.

மெல்லெழுத் தென்ப ஙஞண நமன. ௨௦

21 இடையினமெய்

இடையெழுத் தென்ப யரல வழள. ௨௧

22 மெய் மயங்குமாறு

அம்மூ வாறும் வழங்கியல் மருங்கின்
மெய்ம்மயக் குடனிலை தெரியுங் காலை. ௨௨

23 தனிமெய் பிறமெய்யுடன் மயங்குமாறு

டறலள என்னும் புள்ளி முன்னர்க்
கசப என்னும் மூவெழுத் துரிய. ௨௩

24 இதுவும் அது.

அவற்றுள்,
லளஃகான் முன்னர் யவவுந் தோன்றும். ௨௪

25 இதுவும் அது.

ஙஞணநமனவெனும் புள்ளி முன்னர்த்
தத்த மிசைகள் ஒத்தன நிலையே. ௨௫



26. இதுவும். அது

அவற்றுள்,
ணனஃகான் முன்னர்க்,
கசஞப மயவவ் ஏழும் உரிய ௨௬

27 இதுவும் அது

ஞநமவ என்னும் புள்ளி முன்னர்
யஃகான் நிற்றல் மெய்பெற் றன்றே. ௨௭

28 , இதுவும் அது

மஃகான் புள்ளிமுன் வவ்வுந் தோன்றும். உஅ

29 இதுவும் அது.

யாழ என்னும் புள்ளி முன்னர்
முதலா கெழுத்து ஙகரமொடு தோன்றும். உகூ

30 தனிமெய் தனனொற்றோடு மயங்குமாறு,

மெய்ந்நிலை சுட்டின் எல்லா எழுத்தும
தம்முற் றாமவரூஉம் ரழவலங் கடையே. ௩0

31 சுட்டெழுத்துக்கள்

அஇ உஅம் மூன்றும சுட்டு. ௩க

32 வினவெழுத்துக்கள்.

ஆ ஏ ஓஅம மூன்றும வினு ௩உ

33 இசைநூலிலக்கணம இந்நூற்கிசையுமாறு

அளபிறந் துயிர்த்தலும ஒற்றிசை நீடலும
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனர் புலவர். ௩௩

நூன்மரபு முற்றிற்று.

12 எழுத்ததிகாரம்

## இரண்டாவது

# மொழிமரபு.

---

34 குற்றியலிகரத்திற்கிடனும பற்றுக்கோடும.

குற்றிய லிகரம் நிற்றல வேண்டும்
யாவென் சினைமிசை உரையசைக் கிளவிக்
காவயின் வரூஉம மகரம ஊர்ந்தே. க

35 குற்றியலிகரம் புணர்மொழியகத்தும்
வருமெனல.

புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே
உணரக் கூறின் முன்னர்த் தோன்றும். ௨

36 ஒருமொழிக்குற்றியலுகரத்திற்
கிடனும் பற்றுக்கோடும்

நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி ஈற்றும்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே. ௩

37 புணர்மொழியிற் குற்றியலுகரம்
தன்மாத்திரையிற் குறுகல

இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே
கடப்பா டறிந்த புணரிய லான. ௪



38 ஆய்தம் ஒருமொழியுள் வருமாறு
குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்த வல்லா றன்மிசைத்தே. ௫

39 ஆய்தம் புணர்மொழியகத்துவருமாறு
ஈறியல் மருங்கினும் இசைமைதோன்றும். ௬

40 செய்யுளியற்கண் ஆய்தவிலக்கணம்
உருவினும் இசையினும் அருகித் தோன்றும்
மொழிக்குறிப் பெல்லாம் எழுத்தின் இயலா
ஆய்தம் அஃகாக் காலை யான. ௭

41 அளபெடைக்குறி

குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும
நெட்டெழுத் திபபர் ஒததகுற றெழுத்தே. அ

42 ஐஔ அளபெடைகுறி

ஐஔ என்னும ஆயி ரெழுததிற
கிகர உகரம இசைநிறை வாகும. கூ

43 ஓரெழுத்தொருமொழி

நெட்டெழுத தேழே ஓரெழுத் தொருமொழி கo

44 குற்றுயிர் மொழிநிறைவு

குற்றெழுத தைந்தும மொழிநிறை பிலவே. கக

45 மொழியின் பெயர் முறைதொகை.

ஓரெழுத தொருமொழி ஈரெழுத் தொருமொழி



இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி உளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே. க௨

46 தனிமெய் இயக்கம்

மெய்யின இயக்கம அகரமொடு சிவணும. க௩

47 உயிர்மெய் பெயர் பெறுமாறு

தம்மியல கிளபபின் எல்லா எழுததும
மெய்ந்நிலை மயககம மான மிலலே. க௪

48 ஈரொற்றுடனிலை

யாழ என்னும் மூன்றும் ஒற்றக
கசதப ஙஞநம ஈரொற றாகும க௫

49 குற்றொற்றுகாமெய்கள்

அவற்றுள,
ரகார ழகாரம குற்றொற் றாகா. க௬

50 தொடர்மொழி நெட்டெழுத்

தனபிற்றெனல.

குறுமையு நெடுமையும் அளவிற் கோடலின்
றொடர்மொழி யெல்லாம் நெட்டெழுத் தியல. கஎ

51 செய்யுளில் ஈரொற்றிலக்கணம்

செய்யு ளிறுதிப் போலி மொழிவயின்
னகார மகாரம் ஈரொற் றாகும். கஅ



52 மகரகுறுகுமிடம்

னகாரை முன்னர் மகாரங் குறுகும். ககூ

53 செய்யுளியலுள மெய்
குற்றுகரதியல்பு

மொழிப்படுத் திசைப்பினுந் தெரிந்துவே றிசைப்பினும்
எழுத்திய றிரியா என்மனார் புலவர். உ0

54 எழுத்துப்போலி

அகர இகர மைகார மாகும். உக

55 இதுவுமது.

அகர உகர மௌகார மாகும். உஉ

56 இதுவுமது.

அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயெ னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும் உ௩

57 செய்யுளியற்படி ஐஔவின்
மாத்திரை.

ஓரள பாகும் இடனுமா ருண்டே
தேருங் காலை மொழிவயி னான. உ௪

58 எழுத்துப்போலி

இகர யகரம் இறுதி விரவும். உரு

59 மொழிமுதலெழுத்துக்கள்

பன்னீருயிரும் மொழிமுதல் ஆகும். உ௬



60 தனிமெய் மொழிமுதலாகாதெனல்

உயிர்மெய் அல்லன மொழிமுதல் ஆகா உ௭

61 பன்னீருயிருடன் மொழி முதலாகுமெய்கள்.

கதந பமஎனும் ஆவைந் தெழுத்தும்

எல்லா உயிரொடும் செல்லுமார் முதலே. உ௮

62 சகரமெய் ஒன்பதுயிருடன் மொழிமுதலாதல்

சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே

அஐ ஔஎனும் மூன்றலங் கடையே உ௯

63 வகரமெய் எட்டுயிருடன் மொழிமுதலாதல்

உ ஊ ஒ ஓ என்னும் நான்குயிர்

வ என் எழுத்தொடு வருதல் இல்லை. ௩0

64 ஞகரமெய் மூன்றுயிருடன் மொழிமுதலாதல்

ஆ எ,

ஒ எனும் மூவுயிர் ஞகாரத் துரிய. ௩௧

65 யகரம் ஆகாரத்துடனே மொழி முதலாமெனல்

ஆவோ டல்லது யகரம் முதலாது. ௩௨

66 எல்லாவெழுத்தும் முதலாமாறு

முதலா ஏன தம்பெயர் முதலும். ௩௩

67 குற்றியலுகரம் மொழிமுதலாமாறு

குற்றிய லுகரம் முறைப்பெயர் மருங்கின்
ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும். கூச

68 மேலதற்கோர் புறனடை

முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅ
தப்பெயர் மருங்கி னிலையிய லான. கூரு

69 உயிர் மொழிக்கு ஈறுமாறு

உயிரௌ வெஞ்சிய இறுதி யாகும். கூசு

70 ஔவெனுயிர் இன்னுழி ஈறுமென்னல்

கவவோ டியையின் ஔவுமா ஆகும். கூஎ

71 எகரவுயிர் மெய்யோடீறாகாதெனல்

எ என வருமுயிர் மெய்யீ றாகாது. கூஅ

72 ஒகரம் நகரமெய்யொன்றனுடன் ஈறுமெனல்.

ஒவவும் அற்றே நவ்வலங் கடையே. கூகூ

73 ஏ ஓ ஞகரமெய்யுடனீறாகாதென்னல்

ஏ ஒ எனுமுயிர் ஞகாரத் தில்லை. சo

3.

74 உஊகாரவகரமெய்யுடனீருகாதெனல்

உஊ கார நவவொடு நவிலா. சக

75 ச, இருமொழிக்கே யீருமெனல்

உச்ச காரம் இருமொழிக குரித்தே. சஉ

76 பு, ஒருமொழிக்கேயீருமெனல்.

உபப காரம் ஒனறென மொழிப
இருவயின் நிலையும் பொருட்டா குமமே. சஙு

77 எருகாவுயிர்மெய இன்னுழி
யீருமெனல்.

எஞ்சிய எலலாம் எஞ்சுதல் இலவே. சச

78 மொழியீரும் மெய்கள்

ஞணநம னயால வழள என்னும்
அப்பதி னொன்றே புள்ளி இறுதி. சரு

79 நகாமெய் இருமொழிக்கே
யீருமெனல்

உச்ச காரமொடு நகாரம் சிவணும். சசு

80 ஞகாரமெய் ஒருமொழிக்கே
யீருமெனல்

உப்ப காரமொடு ஞகாரையும் அறறே
அப்பொருள் இரட்டா திவணை யான. சஎ



81 வகாமெய் நான்மொழிக்கீறுதல்

வகரக் கிளவி நான்மொழி ஈற்றது. சஅ

82 ணகாவீறுத்தொடாமொழி
ஒன்பதெனல்.

மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த
னகரத் தொடர்மொழி யொன்பஃ தென்ப
புகரறக் கிளந்த வஃறிணை மேன. ௪௯

மொழிமரபு முற்றிற்று.



## மூன்றாவது
## பிறப்பியல்.

—.o.—

எழுத்துக்கள்
83 பொதுவாகப்பிறக்குமாறு

உந்தி முதலா முந்துவளி தோன்றித்
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇப்
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்

உறுப்புற் றமைய நெறிப்பட நாடி



எல்லா எழுத்துஞ் சொல்லுங் காலைப்
பிறப்பின் ஆக்கம் வேறுவே றியல,
திறப்படத் தெரியுங் காட்சி யான. ௧

84 உயிரெழுத்துக்களின் பொதுப்பிறவி

அவ்வழி,

பன்னீ ருயிரும் தந்நிலை திரியா
மிடறு பிறந்த வளியின் இசைக்கும். ௨

85 அ ஆ பிறக்குமாறு

அவற்றுள்,
அ ஆ ஆயிரண் டங்காந் தியலும். ௩

86 இகரமுதலியன பிறக்குமாறு

இ ஈ எ ஏ ஐ என இசைக்கும்
அப்பால் ஐந்தும் அவற்றோ ரன்ன
அவைதாம்,
அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய. ௪

87 உகரமுதலியன பிறக்குமாறு

உ ஊ ஒ ஓ ஔ என இசைக்கும்
அப்பால் ஐந்தும் இதழ்குவிந் தியலும். ௫

88 உயிர்க்கும் மெய்க்கும் பொதுவிதி

தத்தம் திரிபே சிறிய என்ப.

## பிறப்பியல் ௬

89 மெய்களுட் சிலவற்றிற்குச் சிறப்புவிதி

ககார ஙகாரம் முதல்நா அண்ணம். ௭

90 இதுவுமது

சகார ஞகாரம் இடைநா அண்ணம். ௮

91 இதுவுமது

டகார ணகாரம் நுனிநா அண்ணம். ௧௪

92 மேலனவற்றிற்கோ ரையமுரைத்தது

அவ்வா றெழுத்தும் மூவகைப் பிறப்பின. ௧௫

93 த, நமெய்கள் பிறக்குமாறு

அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கின்
நாநுனி பரந்து மெய்யுற ஒற்றத்
தாமினிது பிறக்கும் தகார நகாரம். ௧௬

94 ற, ன மெய் பிறக்குமாறு

அணரி நுனிநா அண்ணம் ஒற்ற
றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும். ௧௭

95 மெய் பிறக்குமாறு

நுனிநா அணரி அண்ணம் வருட
ரகார ழகாரம் ஆயிரண்டும் பிறக்கும். ௧௮

96 ல, ள பிறக்குமாறு
நாவிளிம்பு வீங்கி அண்பல் முதலுற



ஆவயின் அண்ணம் ஒற்றவும் வருடவும்
லகார ளகாரமாய் இரண்டும் பிறக்கும். ௧௯

97 ப, ம பிறக்குமாறு

இதழியைந்து பிறக்கும் பகார மகாரம் ௨௦

98 வகரமெய் பிறக்குமாறு

பலிதழ் இயைய வகாரம் பிறக்கும். கசு

99 யகரம் பிறக்குமாறு

அண்ணம் சேர்ந்த மிடற்றெழு வளிஇசை
கண்ணுற் றடைய யகாரம் பிறக்கும். கள

100 மெல்லெழுத்துக்கள்

பிறக்குமிடம்

மெல்லெழுத் தாறும் பிறப்பின் ஆக்கம்
சொல்லிய பள்ளி நிலையின வாயினும்
மூக்கின் வளிஇசை யாப்புறத் தோன்றும். கஅ

101 சார்பெழுத்துக்கள் பிறக்குமாறு

சார்ந்துவரின் அல்லது தமக்கியல் பிலவெனத்
தேர்ந்துவெளிப் படுத்த வேனை மூன்றும்
தத்தம் சார்பிற் பிறப்பொடு சிவணி
ஒத்த காட்சியிற் றம்மியல் பியலும். கக



102. எழுத்துக்களின் பிறப்புக்குப்
புறனடை

எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி எழுதரு வளியிற்
பிறப்பொடு விடுவழி உறழ்ச்சி வாரத்

அகத்தெழு வளியிசை அரிறப நாடி
அளபிற் கோடல் அந்தணர் மறைத்தே
அஃதிவண் நுவலா தெழுந்துபுறத் திசைக்கும்
மெய்தெரி வளியிசை அளவுநுவன் றிசினே.

பிறப்பியல் முற்றிற்று.

நான்காவது

## புணரியல்

103 மொழிக்கு முதலிலும் இறுதியிலும்வரும்
முப்பத்துமூன்றெழுத்துக்கள்

மூன்றுதலை யிட்ட முப்பதிற் றெழுத்தின்
இரண்டுதலை யிட்ட முதலா கிருபஃ
தறுநான் கீற்றொடு நெறிநின் றியலும்

* இதனை இரண்டு சூத்திரமாக்கியும் உரைப்பர் என்பது
நச்சினார்க்கினியம்.



எல்லா மொழிக்கும் இறுதியும் முதலும்
மெய்யே உயிரென் றாயீ ரியல.

104 மொழியிறுதிமெய்கள் புள்ளிபெறு
மெனல்

அவற்றுள்,

மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்.

105 குற்றியலுகரமும்மெய்போலுமெனல

குற்றிய லுகரமும் அற்றென மொழிப.

106 உயிர்மெய்யீறும் உயிரீற்றதெனல்

உயிர்மெய் ஈறும் உயிரீற் றியற்றே.

107 இருமொழிப்புணர்ச்சிவகை

உயிரிறு சொன்முன் உயிர்வரு வழியும்
உயிரிறு சொன்முன் மெய்வரு வழியும்
மெய்யிறு சொன்முன் உயிர்வரு வழியும்
மெய்யிறு சொன்முன் மெய்வரு வழியுமென
றிவ்வென அறியக் கிளக்குங் காலை
நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவியென
றாயி ரியல புணர்நிலைச் சுட்டே.

108 மொழிபுணரியல்பு நான்கெனல்

அவற்றுள்,

நிறுத்த சொல்லின் ஈறா கெழுத்தொடு
குறித்துவரு கிளவி முதலெழுத் தியையப்



பெயரொடு பெயரைப் புணர்க்குங் காலும்
பெயரொடு தொழிலைப் புணர்க்குங் காலும்
தொழிலொடு பெயரைப் புணர்க்குங் காலும்

தொழிலொடு தொழிலைப புணர்க்குங காலும
மூன்றே திரிபிடன் ஒன்றே இயல்பென
ஆறாக நான்கே மொழிபுணர் இயல்பே. ௬

109 மூவகைத்திரிபு

அவைதாம்,
மெய்பிறி தாதல் மிகுதல் குன்றலென்
றிவ்வென மொழிப திரிபு மாறே. ௭

110 புணர்நிலை அடைமொழி

நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியும்
அடைபொடு தோன்றினும் புணர்நிலைக் குரிய. ௮

111 மரூஉ மொழிப்புணர்ச்சி

மருவின தொகுதி மயங்கியல் மொழியும்
உரியவை உளவே புணர்நிலைச் சுட்டே. ௯

112 புணர்ச்சியினிருவகை

வேற்றுமை குறித்த புணர்மொழி நிலையும்
வேற்றுமை அல்வழிப் புணர்மொழி நிலையும்



எழுத்தே சாரியை ஆயிரு பண்பின
ஒழுக்கல் வலிய புணருங் காலை. ௰

113 வேற்றுமையுருபுகள்

ஐஒடு குஇன் அதுகண என்னும
அவ்வா றென்ப வேற்றுமை உருபே. ௧௧

114 நான்காவது எழாவதன்

உருபுபுணர்நிலை

வல்லெழுத்து முதலிய வேற்றுமை உருபிற்
கொல்வழி ஒற்றிடை மிகுதல் வேண்டும். கஉ

115 ஆறன் அகரஉருபு புணர்நிலை.

ஆறன் உருபின் அகரக் கிளவி
ஈற்று ககரமுனைக் கெடுதல் வேண்டும். கங

116 பெயர்ககண் வேற்றுமை நிறகுமாறு

வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே. கச

117 பெயர்களின பெயர், முறை, தொகை

உயர்திணைப் பெயரே அஃறிணைப் பெயரென்
றாயிரண் டென்ப பெயர்நிலைச் சுட்டே. கரு

118 சாரியை வருமிடம்

அவற்றுவழி மருங்கிற் சாரியை வருமே. கசு

புணரியல் 27

119. சாரியையின் பெயரும் முறையும்
தொகையும்

அவைதாம்,

இன்னே வற்றே அத்தே அம்மே
ஒன்னே ஆனே அக்கே இக்கே
அன்னென் கிளவி உளப்பட்டப் பிறவும்
அன்ன என்ப சாரியை மொழியே. கஎ

120 இன்சாரியை முதல் திரியுமாறு
அவற்றுள்,

இன்னின் இகரம் ஆவின் இறுதி

முன்னர்க் கெடுதல் உரித்தும் ஆகும். கஅ

121 இன்சாரியை ஈறுதிரியுமாறு

அளபாகு மொழிமுதல் நிலைஇய உயிர்மிசை
னஃகான் றஃகான் ஆகிய நிலைத்தே. ககூ

122 வற்று முதல் திரியுமாறு

வஃகான் மெய்கெடச் சுட்டுமுதல் ஐம்முன்
அஃகான் நிற்றல் ஆகிய பண்பே. உ0

123 நான்கு னகர ஈறும் திரியுமாறு

னஃகான் றஃகான் நான்க னுருபிற்கு. உக

124 பொருட்புணர்ச்சியில் ஆனீறுதிரியுமாறு

ஆனின் னகரமும் அதனோ ரற்றே
நாள்முன் வரூஉம் வன்முதற் றொழிற்கே. உஉ



125 அத்து முதல் திரியுமாறு

அத்தின் அகரம் அகரமுனை இல்லை. உங

126 இக்கு முதல் திரியுமாறு

இக்கின் இகரம் இகரமுனை அற்றே. உச

127 ஐ முதல் திரியுமாறு

ஐயின் முன்னரும் அவ்வியல் நிலையும். உரு

128 அக்கு முதலொழிய ஏனைய கெடுமாறு

அப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி
அக்கின் இறுதிமெய்ம் மிசையொடுங் கெடுமே
குற்றிய லுகரம் முற்றத் தோன்றாது. உசு

129 அம் ஈறு திரியுமாறு

அமமின இறுதி கசதக் காலேத
தன்மெய் திரிகது ஙஞந ஆகும். உள

130 இயல்புகணத்துமுன அம ஈறு
கெடுமாறு

மென்மையும இடைமையும வருஉங காலே
இனமை நீவணடும எனமனூர புலவர். உஅ

131 ஐகதாமுருபில இன சாரியை
முழுதம செடுதல

இன்னென வருஉம வேறறுமை உருபிற
கின்னென் சாரியை இனமை வேண்டும். உகூ

புணரியல 29

132. புணர்மொழியுள் சாரியை
வருமெனறல்

பெயருமதொழிலும பிரிநதொருங் கிசைப்ப
வேற்றுமை உருபு நிலேபெறு வழியும
தோறறம் வேணடாத தொகுதிக கண்ணும்
ஒட்டுதற கொழுகிய வழககொடு சிவணிச
சொறசிதர் மருஙகின வழிவகது விளஙகா
திடைநின் றியலும சாரியை இயறகை
உடைமையும இனமையும ஒடுவயின ஒகரும். ௩0

133 அதது, வறறு என்பவற்றின
ஒறறுககேடு பேறும

அததே வறறே ஆயிரு மொழிமேல
ஒறறுமெய் கெடுதல தெறறென் றறறே
அவறறுமுன் வருஉம வலலெழுதது மிகுமே. ௩க

134 எழுத்தின சாரியைகளின்பெயர

காரமும் கரமும கானொடு சிவணி

நேரத தோனறும எழுததின் சாரியை. ௩௨

135 கெட்டெழுத்துச்சாரியை

அவற்றுள்,

கரமும கானும கெட்டெழுத் திலவே. ௩௩

136 குற்றெழுததகுற்ற சாரியை

வரன் முறை மூன்றும் குற்றெழுத் துடைய ௩௪





137 ஐ, ஔவின் சாரியை

ஐகார ஔகாரம் கானொடும் தோன்றும். ௩௫

138 மெய்யீற்றின்முன் உயிர்புணாதல்

புள்ளி ஈற்றுமுன உயிர்தனித் தியலாது

மெய்யொடும் சிவணும் அவ்வியல் கெடுததே. ௩௬

139 உயிர்பிரிந்த உயிர்மெய்யின்
மெய் இயல்பு

மெய்யுயிர் நீங்கில் தன்னுரு வாகும். ௩௭

140 உயிரீறும் உயிர் முதன்மொழியும்
புணருமிடத் துடம்படுமெய் தோன்றல்

எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே

உடம்படு மெய்யின் உருவுகொளல வரையார். ௩௮

141 எழுத்துக்கள் ஒன்று பலவாமாறு

எழுத்தோர் அன்ன பொருடெரி புணர்ச்சி

இசையிற் றிரிதல நிலைஇய பண்பே. ௩௯

142 பொதுப்புணா மொழிகள்

அவைதாம,
முனனப பொருள புணர்ச்சி வாயின்
இன்ன என்னும் எழுத்துகடன் இலவே. சC
புணரியல் முற்றிறறு.



ஐந்தாவது

# தொகைமரபு.

—:o:—

143 உயிர மயங்கியல மெய்ம்மயங்கியலைப்
பறறிய வருமொழி

கசதப முதலிய மொழிமேற றோன்றும்
மெலலெழுத இயறகை சொலலிய முறையான்
ஙஞநம என்னும ஒறறாகுமமே
அன்ன மரபின மொழிவயி னான. க

144 இருபததுநான்கிற்றின் முன்னா
வருமொழியியல்பாதல

ஞநம யவவெனும முதலாகு மொழியும்
உயிர்முத லாகிய மொழியும உளப்பட
அன்றி யனைததும எலலா வழியும்
நின்ற சொலமுன் இயலபா குமமே. உ

145 மெல்லெழுத்துறழ்ச்சி
அவற்றுள்,

முதலிற் கூறுஞ் சினையறி கிளவியும்
சினையிற் கூறும் முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெய ரொட்டும்
வினைமுதல் உரைக்குங் கிளவியொடு தொகைஇ
அனையமர் பினவே ஆகுபெயர்க் கிளவி. ௩௧

598 ஆகுபெயரிலக்கணமிருவகையவெனல்

அவைதாம்,
தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணலும்
ஒப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலும்
அப்பண் பினவே நுவலுங் காலை. ௩௨



599 ஆகுபெயரும் வேற்றுமையேற்குமெனல்

* வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும். ௩௩

600 ஆகுபெயர் வேறுபாடு

அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி
உளவென மொழிப உணர்ந்திசி னோரே. ௩௪

601 ஆகுபெயர்க்குப்புறனடை

கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே. ௩௫

வேற்றுமைமயங்கியல்
முற்றிற்று.

## விளிமரபு.

602 விளியதுபொதுவிலக்கணம்

விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு

தெளியத் தோன்றும் இயற்கைய என்ப க

* இச்சூத்திரத்தை 598ம் சூத்திரத்தின் ஈற்றடியாக்கி ஒரு சூத்திரமாக்கரோர்வர், சேனாவரையர்.



603 இஃது அப்பெயர்களைக் கூறுவலெனல்

அவ்வே,

இவ்வென அறிதற்கு மெய்பெறக் கிளப்ப. உ

604 உயர்திணைப்பெயருள் விளியேற்பவை

அவைதாம்,

இ உ ஐ ஓ என்னும் இறுதி

அப்பால் நான்கே உயர்திணை மருங்கின்

மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே. ௩

605 இகரவீறும் ஐகாரவீறும் விளியேற்குமாறு

அவற்றுள்,

இ ஈ ஆகும் ஐ ஆய் ஆகும். ௪

606 ஒழிந்தன விளியேற்குமாறு

ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும். ௫

607 இஃது ஐயமறுக்கின்றது

608 வேண்டாகூறிவேண்டிய முடித்தல்

ஏனை உயிரே உயர்திணை மருங்கிற்
றாம்விளி கொள்ளா என்மனார் புலவர். ௭





609 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிவருத்தல்

அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்
இயற்கைய ஆகும் செயற்கைய என்ப. ௮

610 எய்தியதன்மேற்சிறப்புவிதி

முறைப்பெயர் மருங்கின் ஐஎன் இறுதி
ஆவொடு வருதற் குரியவும் உளவே. ௯

611 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிவருத்தல்

அண்மைச் சொல்லே இயற்கை ஆகும். ௧௦

612 புள்ளியீற்றுள் விளியேற்பவை

ணரலள என்னும் அந்நான் கென்ப
புள்ளி இறுதி விளிகொள் பெயரே ௧௧

613 வேண்டாகூறிவேண்டியது முடித்தல்

ஏனைப் புள்ளி யீறுவிளி கொள்ளா. ௧௨

614 னகாரவீறுவிளியேற்குமாறு

அவற்றுள்,
அன்னென் இறுதி ஆவா குமே. ௧௩

615 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிவருத்தல்

அண்மைச் சொல்லிற் ககரம் ஆகும். ௧௪

616 ஆனென்பது விளியேற்குமாறு

ஆனென் இறுதி இயற்கை ஆகும். கரு



617 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிவருதல்

தொழிலிற கூறும ஆனென இறுதி
ஆயா குமே விளிவயி னான. கசு

618 இதுவுமது

பண்புகொள பெயரும அதனோ ரற்றே. கஎ

619 எய்தாததெய்துவித்தது

அளபெடைப பெயரே அளபெடை இயல கஅ

620 இதுவுமது

முறைபபெயாக கிளவி ஏயொடு வருமே. ககூ

621 னகாரவீற்றுள்விளியேலாதவை

தானென பெயரும சுட்டு முதற பெயரும
யானென பெயரும வினாவின பெயரும
அன்றி அனைத்தும விளிகோள இலவே. உ0

622 ரகாரவீறுவிளியேற்குமாறு

ஆரும அருவும ஈரொடு சிவணும. உக

623 எய்தியதன்மேற்சிறப்புவிதி

தொழிற்பெய ராயின ஏகாரம வருதலும்
வழுக்கின் றென்மனார் வயங்கி யோரே உஉ

624 இதுவுமது

பண்புகொள பெயரும அதனோ ரறறே. உங



625 எய்தாததெய்துவித்தல்

அளபெடைப பெயரே அளபெடை இயல உச
626 விளியேலாதவை

சுட்டுமுதற பெயரே முறகிளந தன்ன. உரு
627 இதுவுமது

நுமமின் திரிபெயர் வினவின பெயரொன்
றமமுறை இரணடும அவறறியல பிபனும உசு

628 லகாரளகாரவீறு விளியேறறுமாறு
எஞசிய இரணடின் இறுதிப பெயரே
நின்ற ஈறறயல நீட்டம வேண்டும. உஎ
629 எயதியதுவிலககிப்பிறிதுவிதிவகுத்தது

அயனெடி தாயின் இயறகை யாகும. உஅ
630 ளகாரவீறறிறகு எயதியதுவிலககிப
பிறிதுவிதிவகுததல

வினையினும பண்பினும
நினையத தோனறும ஆளென் இறுதி

ஆயா குமமே விளிவயி னான. உகூ
631 எயதியதுவிலக்கிபபிறிதுவிதிவகுத்தல

முறைப்பெயர்க கிளவி முறைப்பெயர் இயல. நூo
632 ளகாரவீறறுஅவிளியேலாதவை

சுட்டுமுதற பெயரும வினவின் பெயரும்
முறகிளந தன்னவென்மனார புலவர. நூக



633 எயதாதஎய்துவிததது

அளபெடைப் பெயரே அளபெடை இயல. ௩௨

634 விரவுப்பெயர் விளியேற்குமாறு

கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர்
விளம்பிய நெறிய விளிக்குங் காலை. ௩௩

635 அஃறிணைப்பெயர் விளியேற்குமாறு

புள்ளியும் உயிரும் இறுதி யாகிய
அஃறிணை மருங்கின் எல்லாப் பெயரும்
விளிநிலை பெறூஉம் காலந் தோன்றின்
தெளிநிலை யுடைய ஏகாரம் வரலே. ௩௪

636 ஏழவகைப்பெயர்க்குமெய்தியதுவிலக்கிப்
பிறிதுவிதி வகுத்தது

உளவெனப் பட்ட எல்லாப் பெயரும்
அளபிறந் தனவே விளிக்குங் காலைச்
சேய்மையின் இசைக்கும் வழக்கத் தான. ௩௫

637 அம்மஎன இடைச்சொல் விளியேற்குமாறு

அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம்
அம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்
விளியொடு கொள்ப தெளியு மோரே. ௩௬



638 உயர்திணைப்பெயருள் விளியேலாதவை

தாநு என்ன அவைமுத லாகித

தன்மை குறித்த னாளவென இறுதியும்
அன்ன பிறவும் பெயர்நிலை வரினே
இன்மை வேண்டும் விளியொடு கொள்ளே ௧௨௭
விளிமரபு முற்றிற்று

ஐந்தாவது
# பெயரியல்.

639 நால்வகைச்சொல்லின் பொதுஇலக்கணம்
எல்லாச் சொல்லும் பொருள் குறித் தனவே ௧
640 அச்சொற்கள் பொருளுணர்த்துமாறு
பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லின் ஆகும் என்மனார் புலவர். ௨
641 இதுவுமது
தெரிபுவேறு நிலையலும் குறிப்பிற் றோன்றலும்
இருபாற் றென்ப பொருண்மை நிலையே. ௩
642 நால்வகையுட்சிறந்தவற்றின் பெயர்
முறை தொகை
சொல்லெனப் படுப பெயரே வினையென்
றாயிரண் டென்ப அறிந்திசி னோரே. ௪
சொல்லதிகாரம் 119

643 இஃது இறந்ததுகாத்தது
இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கிற் றோன்றும் என்ப. ௫

644 பெயர்ச்சொற்றுப்பெயர்முறைதொகை

அவற்றுள்,
பெயரெனப் படுபவை தெரியுங் காலை
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்குமோ ரன்ன உரிமையும்
அம்மூ உருபின தோன்ற லாறே. ௬

645 இதுவும்பெயர்க்கணத்தோரிலக்கணம்

இருதிணைப் பிரிந்த ஐம்பாற் கிளவிக்கும்
உரியவை உரிய பெயர்வயி னான. ௭

646 உயர்திணைப்பெயர்கள்

அவ்வழி,
அவனிவன் உவனென வரூஉம் பெயரும்
அவளிவள் உவளென வரூஉம் பெயரும்
அவரிவர் உவரென வரூஉம் பெயரும்
யான்யாம் நாமென வரூஉம் பெயரும்
யாவன் யாவள் யாவர் என்னும்
ஆவயின் மூன்றோ டப்பதி னைந்தும்
பாலறி வந்த உயர்திணைப் பெயரே. ௮



647 இதுவுமது

ஆண்மை அடுத்த மகனென் கிளவியும்
பெண்மை அடுத்த மகளென் கிளவியும்
பெண்மை அடுத்த இகர இறுதியும்
நம்மூர்ந்து வரூஉம் இகர ஐகாரமும்

முறைமை சுட்டா மகனும மகளும
மாநதர் மககள என்னும பெயரும
ஆடூஉ மகடூஉ ஆயிரு கிளவியும
சுட்டுமுத லாகிய அன்னும் ஆனும
அவைமுத லாகிய பெணடென கிளவியும
ஒபபொடு வரூஉம கிளவியொடு தொகைஇ
அபபதி னைநதும அவற்றோ ரன்ன ௯

648 உயர்திணையொருபாறபெயா

எலலாரும என்னும பெயாநிலைக கிளவியும
எலலீரும என்னும பெயாநிலைக கிளவியும
பெணமை அடுதத மகனென கிளவியும
அன்ன இயல என்மனார் புலவர். ௧௦

649 இதுவுமது

நிலபபெயர் குடிபபெயர் குழுவின பெயரே
வினைபபெயர் உடைபபெயர் பண்புகொள் பெயரே
பலலோர்க குறிதத முறைநிலைப பெயரே
பலலோர்க குறிதத சினைநிலைப பெயரே
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே



கூடிவரு வழக்கின் ஆடியற பெயரே
இனறிவர் என்னும எணணியற பெயரோ
டனறி அனைததும அவறறியல பினவே. ௧௧

650 உயாதிணைபபெயாகருபபுறனடை

அன்ன பிறவும உயாதிணை மருஙகிற
பனமையும ஒருமையும பாலறி வநத

என்ன பெயரும் அத்திணை யவ்வே. கஉ

651 அஃறிணைப்பெயர்

அதுவிது உதுவென வரூஉம் பெயரும்

அவைமுதலாகிய ஆய்தப் பெயரும்

அவையிவை உவையென வரூஉம் பெயரும்

அவைமுதலாகிய அகரப் பெயரும்

யாதுயா யாவை என்னும் பெயரும்

ஆவயின் மூன்றோ டப்பதி னைந்தும்

பாலறி வந்த அஃறிணைப் பெயரே. கங

652 அஃறிணையொருசார்ப்பெயர்கள்

பல்ல பலசில எனனும் பெயரும்

உள்ள இல்ல என்னும் பெயரும்

வினைப்பெயர்க் கிளவியும் பண்புகொள் பெயரும்

இனைத்தெனக் கிளக்கும் எண்ணுக்குறிப் பெயரும்

ஒப்பின் ஆகிய பெயர்நிலை உளப்பட

அப்பால் ஒன்பதும் அவற்றோ ரன்ன. கச

16



653 அஃறிணையியற்பெயர்

கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே

கொள்வழி யுடைய பலவறி சொற்கே. கரு

654 அஃறிணைப்பெயர்க்குப்புறனடை

அன்ன பிறவும் அஃறிணை மருங்கிற்

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த

என்ன பெயரும் அத்திணை யவ்வே கசு

655 அஃறிணையியற்பெயர்பாலுணர்த்துமாறு

தெரிநிலை யுடைய அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே. கஎ

656 விரவுப்பெயர்

இருதிணைச் சொற்குமோ ரன்ன உரிமையிற்
றிரிபுவேறு படூஉம் எல்லாப் பெயரும்
நினையுங் காலைத் தத்தம் மரபின்
வினையோ டல்லது பாற்றெரி பிலவே. கஅ

657 விரவுப்பெயர்திணையறியப்படுமாறு

நிகழூஉ நின்ற * பாலவரை கிளவியின்
உயர்திணை ஒருமை தோன்றலும் உரித்தே
அன்ன மரபின் வினைவயி னான கக

* 'பலர்வரை' என்பது



658 விரவுப்பெயர்கட்குப்பெயருமுறையுந் தொகையும்

இயற்பெயர் சினைப்பெயர் சினைமுதற் பெயரே
முறைப்பெயர்க் கிளவி தாமே தானே
எல்லாம் நீயிர் நீயெனக் கிளந்து
சொல்லிய அல்ல பிறவும் ஆஅங்
கன்னவை தோன்றின் அவற்றொடுங் கொளலே உ0

659 தொகுத்தனவற்றைவிரிக்கின்றது

அவற்றுள்,
நான்கே இயற்பெயர் நான்கே சினைப்பெயர்

நான்கென மொழிமனார் சினைமுதற் பெயரே
முறைப்பெயர்க் கிளவி இரண்டா குமமே
ஏனைப் பெயரே தத்தம மரபின. உ௧

660 இயற்பெயரின் பெயருமுறையும்
அவைதாம,
பெண்மை இயற்பெயர் ஆண்மை இயற்பெயர்
பன்மை இயற்பெயர் ஒருமையியற் பெயரென
றந்நான் கென்ப இயற்பெயர் நிலையே. உ௨

661 சினைப்பெயரின் பெயருமுறையும
பெண்மைச் சினைப்பெயர் ஆண்மைச் சினைப்பெயர்
பன்மைச் சினைப்பெயர் ஒருமைச்சினைப் பெயரென
றந்நான் கென்ப சினைப்பெயர் நிலையே. உ௩



662 சினைமுதற்பெயரின் பெயருமுறையும்
பெண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
ஆண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
பன்மை சுட்டிய சினைமுதற் பெயரே
ஒருமை சுட்டிய சினைமுதற் பெயரென
றந்நான கென்ப சினைமுதற் பெயரே உ௪

663 முறைப்பெயரின் பெயருமுறையும
பெண்மை முறைப்பெயர் ஆண்மை முறைப்பெயரென
றாயிரண் டென்ப முறைப்பெயர் நிலையே. உ௫

664 பெண்மைப்பெயருமதிணைகதுரிமையும
பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும

ஒன்றற்கும் ஒருத்திக்கும் ஒன்றிய நிலையே. உ௬

605 ஆண்மைப்பெயருந்திணைக்குரிமையும்

ஆண்மை சுட்டிய எல்லாப் பெயரும்

ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே உ௭

666 பன்மைப்பெயருந்திணைக்குரிமையும்

பன்மை சுட்டிய எல்லாப் பெயரும்

ஒன்றே பலவே ஒருவர் என்னும்

என்றிப் பாற்கும் ஓரன் னவ்வே. உ௮

667 ஒருமைப்பெயருந்திணைக்குரியவும்

ஒருமை சுட்டிய எல்லாப் பெயரும்

ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே. உ௯

பெயரியல் 125

668 தாமென்பெயர்இருதிணைக்குரித்தாமாறு

தாமென் கிளவி பன்மைக் குரித்தே ௩0

669 தானென்பதுஇருதிணைக்குரித்தாமாறு

தானென் கிளவி ஒருமைக் குரித்தே. ௩௧

670 எல்லாமெனபதுதிணைக்குரித்தாமாறு

எல்லாம் என்னும் பெயர்நிலைக் கிளவி

பலவழி நுதலிய நிலைத்தா கும்மே ௩௨

671 எய்தியதொருமருங்குமறுக்கின்றது

தன்னுள் உறுத்த பன்மைக் கல்ல

துயர்திணை மருங்கின் ஆக்கம் இலலே. ௩௩

672 நீயிர்நீஎன்பவற்றைத்திணைக்

குரிமைப்படுத்தல்

நீயிர் நீயென வரூஉம் கிளவி

பாற்றி பிலவே உடனமொழிப பொருள                க௪
(67) நீயெனபதுபாற தரிததாமாறு
அவற றுள,
நீயென் கிளவி ஒருமைக் குரித்தே.                க௫
674 நீயிரென்பதுபாற்குரிததாமாறு
எனைக் கிளவி பன்மைக் குரித்தே. •                க௬



675 உயர்திணையதிகாரததின் ஒழிபுகூறல
ஒருவர் என னும பெயர்நிலைக் கிளவி
இருபாறகும உரிததே தெரியுங காலை.                க௭
676 ஒருவரென்பதன முடிபு
தன்மை சுட்டிற பனமைக கேறகும                க௮
" 677 நீயிர நீ ஒருவாஎன்பவறறிறகோர
இலககணம
இன்ன பெயரே இவையெனல வேண்டிவ
முனனம சேர்தது முறையின் உணர்தல.                க௯
678 உயாதிணையொழிபுகூறல
மகடூ மருஙகிற பாறிரி கிளவி
மகடூ இயற்கை தொழிலவயி னான.                ௪0
679 பெயரீறசெயயுளுள திரியுமெனல
ஆஓ ஆகும பெயருமா ருளவே
ஆயிடன அறிதல செயயுள உளவே                ௪௧
680 விரவுபபெயாசெயயுளுள வருமுறைமை
இறைச்சிப பொருள்வயிற செயயுளுட் கிளககும்
இயறபெயர்க கிளவி உயர்திணை சுடடா

நிலததுவழி மருஙகிற றேன்ற லான. ௬௨
681 எய்தியது விலககிற்று
திணையொடு பழகிய பெயரலங் கடையே. ௬௩
பெயரியல முறறிறறு



ஆறாவது

# வி னை யி ய ல்.

682 வினைசசொறகுப்பொதுவிலககணம்

வினையெனப படுவது வேறறுமை கொளளாது
நினையுங காலைக காலமொடு தோன்றும். ௧

683 மூவகைககாலம

காலந் தாமே மூன்றென மொழிப. ௨

684 காலததின்பெயாமுறைதொகை

இறபபின் நிகழவின எதிரவின என்று
அமமுக காலமும் குறிபபொடுங கொளளும
மெய்நிலை யுடைய தோன்ற லாறே. ௩

685 வினைசசொற்களினபாகுபாடு

குறிப்பினும் வினையினும் நெறிப்பட்த தோன்றிக
காலமொடு வருஉம வினைசசொல எல்லாம
உயாதிணைக குரிமையும அஃறிணைக குரிமையும்
ஆயிரு திணைககுமோ ரன்ன உரிமையும
அமமூ வுருபின தோன்ற லாறே. ௪

686 உயாதிணை முறறுவினை

அவைதாம,
அம ஆம எமஏம் என்னுங் கிளவியும்
உம்மொடு வருஉங் கடதற என்னும்

அநகாற கிளவிபொ டாயெண் கிளவியும
பன்மை உரைக்குந தன்மைச சொலலே. ரு

687 தனிததன்மை முற்று

கடதற என்னும
அநநான கூர்நத குனறிய லுகரமோ
டென்னேன் அலலென வரூஉம ஏழும்
தன்வினை யுரைககுந தன்மைச சொலலே, சு

688 ககரஉகரவீற்றிறநதவேற்றுமைமுடிபு

அவற்றுள்,
செய்கென் கிளவி வினையொடு முடியினும
அவ்வியல திரியா தென்மனா புலவர். எ

689 படர்க்கையொருமைமுறறு

அன் ஆன் அள ஆள் எனனும நான்கும
ஒருவர் மருஙகிற படாககைச சொலலே. அ

690 படாககைபபனமைமுறறு

அர் ஆர் பஃஎன வரூஉம மூனறும
பலலோர் மருஙகிற படர்ககைச சொலலே கூ

691 பனமைககுரியவீறும அதனமுடிபு
வேறறுமையும

மாரைக் கிளவியும பலலோர படர்ககை
காலக் கிளவிபொடு முடியும எனப. கo



692 தெரிநிலைவினைகள்உயாதிணைக
குரியவெனல

பனமையும ஒருமையும பாலறி வநத

அஙஙா லைந தும மூனறுதலை யிடட
முன் னுறக கிளநத உயா திணை யவவே. கக

693 உளபபாட்டுததனமைககுததிரிபு
அவற றுள,
பனமை யுரைககுந தன் மைக கிளவி
எணணியல மருஙகிற றிரிபவை யுளவே கஉ

694 உயா திணை விைனககுறிபபினுளஒன று
யா அர் என் னும் வினவின கிளவி
அதிணை மருஙகின் முபபாறகும உரிததே. கங

695 இருபததமூன் றன் மூன் றீறு
செயயுளுடடிரியுமாறு
பாலறி மரபின அமமூ வீறறும
ஆஒ ஆகும செயயுள உள்ளே கச

696 விரவுவினையும அமமுடிபுபெறுமெனல
ஆயென கிளவியும அவறறொடு கொளளும. கரு

697 உயா திணை விைனககுறிபபு உணாததல
அதுச்சொல வேறறுமை யுடைமை யானும
கண்ணென் வேற்றுமை நிலத்தி னுனும





ஒபபி னுனும பணபி னுனுமென்
றபபாற காலங குறிபபொடு தோனறும். கசு

698 இதுவுமது
அனமையின இனமையின் உண் மையின
வனமையின்
அனன பிறவும குறிபபொடு கொளளும

699 வினைக்குறிப்பிற்குரூமாறு

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அன்ன மரபிற் குறிப்பொடு வரூஉங்
காலக் கிளவி உயர்திணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே கஅ

700 அஃறிணைத்தெரிநிலைவினை

அது வென வரூஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவற்றுப் படர்க்கை. கக

701 ஒருமைவினை

ஒன்றன் படர்க்கை தறட ஊர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும். உ0

702 விரிந்ததுதொகுத்துத்திணைக்குரிமை கூறல்

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அம்மூ விரண்டும் அஃறிணை யவ்வே. உக

வினையியல் 131

703 அஃறிணையிருபாற்குமுரியதோர வினைக்குறிப்பு

அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்
ஒக்கும் என்ப எவனென் வினாவே உஉ

704 அஃறிணை வினைக்குறிப்பு

இன்றில வுடைய வென்னுங் கிளவியும்
அன்றுடைத் தல்ல வென்னுங் கிளவியும்
பண்புகொள் கிளவியும் உளவென் கிளவியும்
பண்பி னாகிய சினைமுதற் கிளவியும்

ஒப்பொடு வரூஉங் கிளவியொடு தொகைஇ
அப்பாற் பத்துங் குறிப்பொடு கொள்ளும் ௨௩

705 அவ்வினைக்குறிப்பிற்குரியமரபு

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அன்ன மரபிற் குறிப்பொடு வரூஉங்
காலக் கிளவி அஃறிணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே ௨௪

706 விரவுவினையுணர்த்துகின்றவற்றின் பெயர் முதலியன

முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
இன்மை செப்பல் வேறென் கிளவி
செய்ம்மன செய்யும் செய்த என்னும்
அம்முறை நின்ற ஆயெண் கிளவியும்



பிரிவுவேறு படூஉம் செய்திய வாகி
இருதிணைச் சொற்குமோ ரன்ன உரிமைய ௨௫

707 முன்னிலையொருமைவினை

அவற்றுள்,
முன்னிலைக் கிளவி,
இஐ ஆயென வரூஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவற்கும் ஒன்றற்கும். ௨௬

708 முன்னிலைப்பன்மைவினை

இர் ஈர் மின்னென வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோர் அனைய என்மனார் புலவர். ௨௭

709 முன்னிலையொழிந்தவற்றின் இலக்கணம்

எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி
ஐம்பாற்கும் உரிய தோன்ற லாறே. உஅ

710 எய்தியதுவிலக்கிற்று

அவற்றுள்,
முன்னிலை தன்மை ஆயீ ரிடத்தொடும
மன்னா தாகும வியங்கோட் கிளவி. உகூ

711 இதுவுமது

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச்
செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா. ௩0



712 வினையெச்சவாய்பாடுகள்

செய்து செய்யூச செய்பு செய்தெனச
செய்யியர் செய்யிய செயினசெயச செயற்கென
அவ்வகை ஒன்பதும வினையெஞ்சு கிளவி ௩௧

713 ஒருசார்வினையெச்சமுணர்த்தல்

பின்முன் கால்கடை வழியிடத் தெனனும
அன்ன மரபிற காலங கண்ணிய
என்ன கிளவியும அவற்றியல பினவே ௩௨

714 முதல்வினைமூன்றற்கும்முடிபு

அவற்றுள்,
முதனிலை மூனறும் வினைமுதல முடிபின. ௩௩

715 அம்மூன்றற்குமமுடிபுவேற்றுமை

அம்முக் கிளவியும் சினைவினை தோன்றின்
சினையொடு முடியா முதலொடு முடியினும்
வினையோ ரனைய என்மனார் புலவர். ௬௪

716 ஒழிந்தவெச்சங்கட்கு முடிபு

ஏனை எச்சம் வினைமுத லானும்
ஆன்வந் தியையும் வினைநிலை யானும்
தாமியல் மருங்கின் முடியும் என்ப. ௬௫



717 அவ்வெச்சங்கள் அடுக்கியவழிப்படுவதோர் முறைமை

பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி
சொன்முறை முடியா தடுக்குந வரினும்
முன்னது முடிய முடியுமன் பொருளே ௬௬

718 செய்யுஞ்செய்த வென்னும்பெயரெச்சத்திற்குப் பொருள்முடிபு

நிலனும் பொருளும் காலமும் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையும் உளப்பட
அவ்வறு பொருட்கும் ஓரன்ன உரிமைய
செய்யும் செய்த என்னும் சொல்லே. ௬௭

719 செய்யுமென்பதற்கோர்முடிபு வேற்றுமை

அவற்றொடு வருவழிச் செய்யுமென் கிளவி
முதற்கண் வரைந்த மூவீற் றுமுரித்தே ௩௮

720 இருவகை எச்சத்திற்கும் எதிர்மறைவினையும்
முடிவாமெனல்

பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்
எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை
திரியா. ௩௯



721 அவ்வெச்சங்களின் இடைநிகழும் முடிபு
வேற்றுமை

தத்தம் எச்சமொடு சிவணுங் குறிப்பின்
எச்சொல் லாயினும் இடைநிலை வரையார். ௪௦

722 செய்யுமென் பதற்கு ஈறு கெடுமாறு
அவற்றுள்,

செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
மெய்யொடுங் கெடுமே ஈற்றுமிசை உகரம்
அவ்விடன் அறிதல் என்மனார் புலவர். ௪௧

723 இறந்தகாலச்சொல் வினைக்காலச்
சொல்லோடியையுமாறு

செய்தென் எச்சத்து இறந்த காலம்
எய்திடன் உடைத்தே வாராக் காலம். ௪௨

724 நிகழ்காலச்சொல் வினைக்காலமும்
உணர்த்தல்

முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை
எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல்

725 விரைவின்கண் எதிரவும் நிகழவும்
இறப்பொடு மயஙகுமெனல

வாராக் காலததும நிகழுங காலத்தும
ஓராங்கு வரூஉம் வினைசசொற் கிளவி



இறநத காலதக் குறிபபொடு கிளததல
விரைநத பொருள என்மனார் புலவர். சச

726 மிககதோன்றன்கண இறப்பும எதிரவும
நிகழவொடு மயஙகுமெனல

மிககதன மருஙகின வினைசசொற சுட்டி
அபபணபு குறிகத வினைமுதற கிளவி
செயவ திலவழி நிகழுங காலதது
மெய்பெறத தோனறும பொருட்டா குமமே. சரு

727 முறறுசசொற்பொருளதருமவேறுபாடு

இதுசெயல வேணடும என்னும கிளவி
இருவயின நிலையும பொருட்டா குமமே
தன்பா லானும பிறன்பா லானும. சசா

728 வினைசசொற்பொருள்படுமவேறுபாடு

வனபுற வரூஉம வினாவுடை வினைசசொல
எதிரமறுத துணர்ததற குரிமையும

729 எதிர்வு இறபபுநிகழ்வுடன்மயஙகுமெனல

வாராக காலத்து வினைசசொற கிளவி
இறபபினும நிகழ்வினும சிறபபத தோன்றும
இயற்கையும தெளிவும் கிளக்கும் காலை. சஅ

இடையியல 137

730 வினைச்சொற்கண்மரபுவழுவமைதி

செயபபடு பொருளைச செய்தது போலத
தொழிறபடக கிளத்தலும வழககியல மரபே. சகூ

731 ஓர்பொருண்மைகுறியாதுஇறபபுமெதிர்வும
மயஙகுமெனல

இறபபே எதிர்வே ஆயிரு காலமும
சிறபபத தோனறும மயஙகுமொழிக கிளவி. ரு

732 நிகழ்வு ஏனையவற்றோடுமயஙகுமெனல

ஏனைக காலமும மயஙகுதல வரையார் ருக

வினையியல முற்றிறறு

---

ஏழாவது

# இடையியல்.

---

733 இடைச்சொற்பொது இலககணம

இடையெனப படுப பெயரொடும வினையொடும
நடைபெற றியலுந தமககியல பிலவே க

734 இடைச்சொறகளினபாகுபாடு

அவைதாம,
புணரியல நிலையிடைப பொருணிலைக குதவுநவும
வினைசெயல மருங்கிற காலமொடு வருநவும

வேற்றுமைப் பொருள்வயின் உருபா குநவும்
அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்
இசைநிறைக் கிளவி ஆகி வருநவும்
தத்தம் குறிப்பிற் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியாற் பொருள்செய் குநவுமென்
றப்பண் பினவே நுவலுங் காலை உ

735 இன்னும் அவற்றுக்கோர் புறநடை

அவைதாம்,
முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும்
தம்மீறு திரிதலும் பிறிதவண் நிலையலும்
அன்னவை எல்லாம் உரிய என்ப. ௩

736 தத்தங்குறிப்பிற்பொருள்செய்வனவற்றுள்
ஒன்றன்பொருட்பாகுபாடு

கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப மன்னைச் சொல்லே. ௪

737 இதுவுமது

விழைவே காலம் ஒழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே. ௫

738 இதுவுமது

அச்சம் பயமிலி காலம் பெருமையென்
றப்பால் நான்கே கொன்னைச் சொல்லே ௬

739 இதுவுமது

எச்சம சிறப்பே ஐயம எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென
றப்பால எட்டே உம்மைச சொல்லே ௭

740 இதுவுமது

பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன் றென்ப ஓகா ரம்மே ௮

741 பொருளபடுமாறும் அசைநிலையாமாறும

தேற்றம வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்வைந தேகா ரம்மே ௯

742 பொருளபடுமாறு

வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரொ டவ்வறு கிளவியும
கண்ணிய நிலைத்தே எனவென கிளவி. ௧0

743 இதுவுமது

என்றென் கிளவியும அதனோ ரற்றே ௧௧

744 இலலெனபதறகுப் புறனடை

வினையினை நிலை தனணிடத திடத்தும. ௧௨



745 ஏகார ஓகாரஙகட்குப புறனடை

தெளிவின ஏயும சிறபபின ஓவும

அளபின எடுதத இசைய எனப. கசு.

746 பொருளபடுமொறுமசைநிலையாமாறும

மறறென கிளவி வினைமாற றசைநிலை

அபபால இரணடென மொழிமனார புலவர கச

747 பொருளபடுமொறு

எறறென கிளவி இறநத பொருடடே கரு

748 இதுவுமது

மறறைய தென்னுங கிளவி தானே

சுட்டுநிலை ஒழிய இனஙகுறித தன்றே. கசு

749 இதுவுமது

மன்றவென் கிளவி தேறறம செய்யும. கஎ

750 இதுவுமது

தஞசக் கிளவி எணமைப பொருடடே கஅ

751 பொருளபடுமொறுமஅசைநிலையும

அநதில ஆஙக அசைநிலைக கிளவியென

றாயிரணடாகும இயறகைத தெனப. ககூ

752 பொருள்படுமொறு

கொலலே ஐயம். உ0



753 இதுவுமது

எலலே இலககம. உக

754 ஆஎன் னுமஇடைசசொலமுடிபு

இயறபெயர் முனனர் ஆரைக கிளவி

டலர்ககுரி எழுததின வினையொடு முடிமே. உஉ

755 மேலைதறகோபுறனடை

அசைநிலைக் கிளவி ஆகுவழி அறிதல் ௨௩

756 இசைநிறையும் அசைநிலையும்

ஏயுங் குரையும் இசைநிறை அசைநிலை
ஆயிரண் டாகும் * இயற்கைத் தென்ப ௨௪

757 அசைநிலைகூறல்

மாவென் கிளவி வியங்கோள் அசைச்சொல் ௨௫

758 இதுவுமது

மியாயிக மோமதி இகுஞ்சின் என்னும்
ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல் ௨௬

759 மேலதற்கோர் புறனடை

அவற்றுள்,
இகுமுஞ் சின்னும் ஏனை இடத்தொடுந்
தகுநிலை யுடைய என்மனார் புலவர் ௨௭

* "இயற்கைய வென்ப" என்பது சேனா-பாடம்



760 பொருள்படுமாறு

அம்மகேட் பிக்கும் ௨௮

761 இதுவுமது

ஆங்க உரையசை. ௨௯

762 இதுவுமது

ஒப்பில் போலியும் அப்பொருட் டாகும். ௩௰

763 அசைநிலைகூறல்

யாகா,

பிறபிறக் கரோ போ மாதென வரூஉம்
ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி. ௩௧

764 சார்ந்தசொற்பொருளையுணர்த்தும்
இடைச்சொல்

ஆக ஆகல் என்ப தென்னும்
ஆவயின் மூன்றும் பிரிவில் அசைநிலை. ௩௨

765 பொருள்வேறுபாடு

ஈரள பிசைக்கும் இறுதியில் உயிரே
ஆயியல் நிலையும் காலத் தானும்
அளபெடை நிலையும் காலத் தானும்
அளபெடை யின்றித் தான்வரும் * காலையும்
உளவென மொழிப பொருள்வேறு படுதல்
குறிப்பின் இசையான் நெறிப்படத் தோன்றும். ௩௩

* 'தால்வரும்' என்பது சேனா. பாடம்



766 இதுவுமது

நன்றீற் றேயும் அன்றீற் றேயும்
அந்தீற் றோவும் அன்னீற் றோவும்
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும். ௩௪

767 முற்கூறிய உம்மைகள்மயங்குமென்றல்

எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையும்
தத்தமுள் மயங்கும் உடனிலை இலவே. ௩௫

768 எச்சவும்மைக்கட்சொல்லுதல்வகைமை

எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயிற்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல். ௩௬

769 முற்றும்மைஎச்சப்பொருட்டுமென

முற்றிய உம்மைத் தொகைச்சொல் மருங்கின்
எச்சக் கிளவி உரித்தும் ஆகும். ௩௭

770 ஈற்றசை ஏகாரத்தின் வேறோர் இலக்கணம்

ஈற்றுநின் றிசைக்கும் ஏயென் இறுதி
கூற்றுவயின் ஓரள பாகலும் உரித்தே. ௩௮

771 எண்களுக்கு முடிபுவேற்றுமை

உம்மை எண்ணும் எனவென் எண்ணும்
தம்வயிற் றொகுதி கடப்பா டிலவே. ௩௯



772 எண்ணிடத்துவழுவமைக்கின்றது

எண்ணே காரம் இடையிட்டுக் கொளினும்
எண்ணுக் குறித் தியலும் என்மனார் புலவர். ௪௦

773 எண்ணுமைபிறவெண்ணொடு மயங்கல்

உம்மை தொக்க எனாவென் கிளவியும்
ஆவீ றாகிய என்றென் கிளவியும்
ஆயிரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன. ௪௧

774 எண்ணிடைச்சொற்றொடர் முடிபுவேறுமை

அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும்
பெயர்க்குரி மரபிற் செவ்வெண் இறுதியும்
ஏயி னாகிய எண்ணின் இறுதியும்
யாவயின் வரினும் தொகையின் றியலா. ௪௨

775 உருபுதொகையெனப்படுமென
வழுவமைத்தது

உம்மை எண்ணின் உருபுதொகல் வரையார். ௪௩

776 உம்மென்னிடைச்சொல் திரியுமெனல்

777 எண்ணிடைசசொறகள வினைசசொற

கணணும வருமெனல

வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா

நினையல வேண்டும அவறறவற றியலபே. சரு



778 எண்ணிடைசசொற்கள் பிரிநது

செனறொன றமெனல

என்றும் எனவும ஒடுவும தோன்றி

ஒன றுவழி யுடைய எண்ணினுட பிரிநதே. சசு

779 எழுவகையிடைசசொற்கும

பொருட்புறனடை

அவவச சொலலிற கவையவை பொருளென

மெயபெறக கிளநத இயல வாயினும

வினையொடும பெயரொடும நினையத தோன்றித

திரிநதுவேறு படினும தெரிநதனா கொளலே. சஎ

780 அவறறிற்குசசொறபுறனடை

கிளநத அலல வேறுபிற தோன்றினும

கிளநதவற றியலான உணாநதனா கொளலே. சஅ

இடையியல முற்றிறறு.

---

எட்டாவது

## உ ரி யி ய ல் .

— o —

781 உரிச்சொற்கெலலாமபொது இலககணம்

உரிசசொற கிளவி விரிககுங காலை

இசையினும குறிபபினும பண்பினும தோன்றிப
பெயரினும வினையினும மெயதடு மாறி

19



ஒருசொற பலபொருட் குரிமை தோன்றினும்
பலசொல் ஒருபொருட் குரிமை தோன்றினும
பயிலா தவறறைப் பயினறவை சார்ததித
தத்தம மரபிற சென்றுநிலை மருஙகின
எசசொல லாயினும பொருளவேறு கிளததல. க

782 உரிசசொற்களுளயான்கூறப்படுவன இவையெனல

வெளிபபடு சொலலே கிளத்தல வேண்டா
வெளிப்பட வாரா உரிசசொல மேன. உ

783 குறிப்புப்பற்றிவருமுரிசசொற் பொருட்பாகுபாடு

அவைதாம்,

உறுதவ நனியென வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப. ௩

784 இதுவுமது

உருவுட் காகும புரையுயர் * வாகும. ௪

785 இது பண்பு

குருவும் கெழுவும் நிறனு கும்மே ரு

786 இது குறிப்பு

செலலல் இன்னல இன்னு மையே. ௬

* 'பர்குவ' என்பது சேனு-பாடம

767 இதவுமது

மலலை வளனே * ஏபெற ருதும். எ

788 இதவுமது

உகப்பே உயர்தல உவப்பே உவகை அ

789 இதவுமது

பயப்பே பயனும். கூ

790 இதுபண்பு

பசப்பு நிறனுதும. க0

791 இதுகுறிப்பு

இயைபே புணாச்சி கக

792 இசைகூறுகின்றது

இசைபபிசை யாகும கஉ

793 இதுகுறிப்பு

அலமால தெருமால் ஆயிரண்டும் சுழறசி. கங

794 இதவுமது

மழவும குழவும இளமைப பொருள கச

795 இதவுமது

சீர்த்தி மிகுபுகழ * மாலை இயல்பே. கரு

* 'ஏபெற் ருகும' என்பதைத தனிசசூத்திரமாககியுரை யிடுவா, சேனுவரையா.

* 'மாலை இயலபே' என்பதைந்ததனிச்சூத்திரமாகி யுரையிடுவர் சேனுவரையர்.



796 இதவுமது

கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும். க௬

797 இதுவுமது

கதழ்வும் ‡ துனைவும் விரைவின் பொருள. கஎ

798 இதுவுமது

அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கஞ் செய்யும் கஅ

799 இது பண்பு

வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்

§ நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள. க௯

800 இது குறிப்பு

தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட் டாகும். உ௦

801 இதுவுமது

கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு. உக

802 இது பண்பு

தடவும் கயவும் நளியும் பெருமை. உ௨

803 எய்தியதன் மேற்சிறப்புவிதி

அவற்றுள்,

தடவென் கிளவி கோட்டமும் செய்யும் உ௩

‡ 'துனைவும்' என்பது சேனா-பாடம்.

§ 'நேர்வும்' என்பது சேனா-பாடம்



804 இதுவுமது

கயவென் கிளவி மென்மையும் * செய்யும், உ௪

805 இதுவுமது

நளியென் கிளவி செறிவும் ஆகும். உ௫

806 இது குறிப்பு

பழுது பயமின்றே உ௬

807 ,இதுபணபு

சாயல மெனமை. உஎ

808 இதருநிபபு

முழுதென கிளவி எஞசாப பொருடடே. உஅ

809 இதவுமத

வமபுநில பினமை உகூ

810 இதவுமது

மாதர் காதல. ௩௦

811 இதவுமது

நமபும மேவும நசையாகுமே ௩௧

812 இதவுமது

ஓயதல ஆய்தல நிழகதல சாஅப

ஆவயின் நானகும உளளதன நுணுககம. ௩௨

813 இதவுமது

புலம்பே தனிமை. ௩௩

* 'ஆகும்' என்பது சேனா-பாடம்.



# சொலலதிகாரம

814 இதவுமது

துவன்று நிறைவாகும.

815 இதுவுமது

முரஞ்சல முதிராவே.

816 இது பண்பு

வெமமை வேண்டல்.

817 இதுகுறிப்பு

பொறபே பொலிவு

818 இதுவுமது

வறிது சிறிதாகும.

819 இதுவுமது

ஏறறம நினைவும் துணிவும ஆகும.

௩௭
௩௮
௩௯
820 குறிப்பும் பண்பும்ணாத்தகின்றத

பிணியும் பேணும் பெடபின் பொருள. ௪௦

821 இதகுறிப்பு

பணிபே பிழைததல பெருபடும் ஆகும். ௪௧

822 இதவுமத

படரே உளளல செலவும் ஆகும். ௪௨

823 இதவுமத

பையுளும் சிறுமையும் நோயின் பொருள். ௪௩

824 இதவுமத

எய்யா மையே அறியா மையே. ௪௪

உரியியல 151

825 இதவுமத

நன்றுபெரி தாகும் ௪௫

826 இதவுமத

தாவே வலியும் வருத்தமும் ஆகும். ௪௬

827 இதவுமத

தெவுககொள்ற பொருட்டே. ௪௭

828 இதவுமத

தெவ்வுப்பகை யாகும் ௪௮

829 இதவுமத

விறப்பும் உறப்பும் வெறிப்பும் செறிவே. ௪௯

830 எய்தியதன்மேறசிறப்புவிதி

அவற்றுள்,

விறப்பே வெரூஉம் பொருட்டும் ஆகும். ௫௦

831 இஃது இசை

கம்பலே சுமமை கலியே அழுஙகல
என்றிவை நானகு ம அரவப பொருள் ௫௧
832 எய்தியதனமேற்சிறப்புவிதி
அவற்றுள,
அழுங்கல இரககமும கேடும ஆகும். ௫௨
833 இதுகுறிப்பு
கழுமென கிளவி மயககம செய்யும் ௫௩
152 சொல்லதிகாரம்

834 இதுவுமது
செழுமை வளனும் கொழுப்பும ஆகும். ௫௪
835 இதுவுமது
விழுமம் சீர்மையும சிறப்பும இடும்பையும ௫௫
836 இதுவுமது
கருவி தொகுதி.
837 இதுவுமது
கமநிறைந் தியலும. ௫௭
838 இதுவுமது
அரியே ஐமை ௫௮
839 இதுவுமது
கவவககத திடுமே ௫௯
840 இஃதிசை
துவைததலும சிலைத்தலும இயம்பலும இரஙகலும
இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர். ௬0
841 எய்தியதன் மேற்சிறப்புவிதி
அவற்றுள்,
இரஙகல் கழிந்த பொருட்டும ஆகும். ௬௧
842 இதுவுமது

இலமபா டொறகம ஆாரணமே வறுமை ருஉ
843 இதுவுமது
ஞெமிர்தலும் பாயதலும பாததற பொருள. ருங



844 இதுவுமது
கவர்வு விருப்பாகும. ருச

845 இதுவுமது
சேரே திரட்சி ருரு

846 இதுவுமது
வியலென கிளவி அகலப பொருட்டே. ருசு

847 இதுவுமது
பேநாம் உருமஎன வரூஉம கிளவி
ஆமுறை மூன்றும அச்சப பொருள. ருஎ

848 இதுவுமது
வயவலி பாகும. ருஅ

849 இது பண்பு
வாளொளி யாகும. ருகூ

850 இது குறிப்பு
* துய்யென் கிளவி அறிவின் திரிபே. எ0

851 இதுவுமது
உயாவே உயங்கல. எக

852 இதுவுமது
உசாவே சூழச்சி. எஉ

* 'தயவென்' என்பது சேனா-பாடம.

863 இதுவுமது

யானுக * கவினு தும். அஉ

864 இதுவுமது

பாவும பழிசசும வழுதவின் பொருள அச

865 பெருமபான்மைகுறிப்பும சிறுபானமை
பண்பும

கடியென் கிளவி

வரைவே கூரமை காபபே புதுமை
விரைவே விளக்கம மிகுதி சிறபபே
அசசம் முனறேற றாயி ரைநதும
மெய்பபடத தோனறும் பொருட்டா குமமே அரு

866 எய்தியதன்மேற்சிறப்புவிதி

ஐயமும கரிபபும ஆகலும் உரித்தே அசு

867 இதுவுமது

[illegible]வியப பாகும். அஎ

868 இதுவுமது

‡ மூனைவுமுனி வாகும். அஅ

869 இதுவுமது

வைவே கூர்மை. அக

* 'கவினும்' என்பது சேனு-பாடம்

‡ 'மூனை' என்றபாடமுங்காட்டுவர், நச்சினார்க்கினியர்



870 இதுவுமது

எறும வலியாகும். கூ0

871 உரிசசொறகெலலாம புறனடை

மெய்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்
முன்னும் பின்னும் வருபவை நாடி
ஒத்த மொழியாற் புணர்த்தனர் உணர்த்தல்
தத்தம் மரபிற் றோன்றுமன் பொருளே. கூக

872 இதுவுமது

* கூறிய கிளவி பொருணிலை அல்ல
வேறுபிறதோன்றினுமவற்றொடுகொளலே. கூஉ

873 நால்வகைச்சொல்லையுமுணருமாறும்
உணர்த்துமாறும் அவற்றின் தன்மையும்
உணர்த்தல்

பொருட்குப்பொருள் தெரியின் அதுவரம்
பின்றே. கூஙு

874 இதுகுறிப்பு

பொருட்குத்திரி பில்லை உணர்த்த வல்லின். கூச

875 இதுவுமது

உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே. கூரு

* இச்சூத்திரத்தில 'கிளவிப்பொருணிலை' 'அவற்றொடுகெ' என்று பாடங் கொள்வர் சேனாவரையர்.



876 சொற்பொருளுணர்த்துங்காரணம்
ஆசிரியர்க்கேபுலப்படுமெனல்

மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா. கூகா

877 உரிச்சொற்குஎழுத்துப்பிரிந்திசைத்தலின

எழுத்துப்பிரிந் திசைத்தல் இவணியல் பின்றே. ௬௭

878 உரிச்சொற்கெல்லாப் புறனடை

அன்ன பிறவும் கிளந்த அல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉம்
உரிச்சொல் எல்லாம் பொருட்குறை கூட்ட

இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்
வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்
தோம்படை ஆணையிற் கிளந்தவற் றியலாற்
பாங்குற உணர்தல் என்மனார் புலவர். ௯௮

உரியியல் முற்றிற்று

— o —

ஒன்பதாவது

## எச்சவியல்.

879 செய்யுட்செய்தற்குரியசொற்களை வரையறை

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே.



880 இயற்சொற்கிலக்கணம்

அவற்றுள்,
இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்குஞ் சொல்லே. ௨

881 திரிசொற்கிலக்கணம்

ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்

வேறுபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி. ௩

882 திசைச்சொற்கிலக்கணம்

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி ௪

883 வடசொற்கிலக்கணம்

வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே. ௫

884 இதுவுமது

சிதைந்தன வரினும் இயைந்தன வரையார் ௬

885 செய்யுள்விகாரமாமாறு

அந்நாற் சொல்லும் தொடுக்குங் காலை
வலிக்கும் வழி வலித்தலும் மெலிக்கும்வழி
மெலித்தலும்



விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழித்
தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்
நாட்டல் வழிய என்மனார் புலவர். ௭

886 செய்யுள்செய்வழி அதன்பொருட்கிடை

நிரனிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்
றவைநான் கென்ப மொழிபுணர் இயல்பே. ௮

887 நிரனிறைகூறுகின்றது

அவற்றுள்,
நிரனிறை தானே,
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்

சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல. ௯

888 சுண்ணமாமாறு

சுண்ணம் தானே,
பட்டாங் கமைந்த ஈரடி எண்சீர்
ஒட்டுவழி அறிந்து துணிந்தனர் இயற்றல். ௰

889 அடிமறியாமாறு

அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே. ௧௧

890 மேலதற்கோர்புறனடை

பொருடெரி மருங்கின
ஈற்றடி இறுசீர் எருத்துவயிற் றிரியும்
தோற்றமும் வரையார் அடிமறி யான. ௧௨



891 மொழிமாற்றுமாறு

மொழிமாற் றியற்கை
சொன்னிலை மாற்றிப் பொருளெதிர் இயைய
முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல். ௧௩

892 இருபொருள் படுவன இவையெனல்

தநு நீ எனும் அவைமுத லாகிய
கிளைநுதல் பெயரும் பிரிப்பப் பிரியா ௧௪

893 தொகைச்சொற்போலடுக்கிவருவன

இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தலென்
றவைமூன் றென்ப ஒருசொல் அடுக்கே ௧௫

894 தொகைச்சொற்குப்பெயருமுறையுந்
தொகையும்

வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே

வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித் தொகையென்
றவ்வா றென்ப தொகைமொழி நிலையே. ௧௬

895 வேற்றுமைத்தொகை

அவற்றுள்,
வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல. ௧௭

896 உவமத்தொகை

உவமத் தொகையே உவம இயல. ௧௮



897 வினைத்தொகை

வினையின் தொகுதி காலத் தியலும். ௧௯

898 பண்புத்தொகை

வண்ணத் தின்வடி வின்அள வின்சுவையின்
என்ன பிறவும் அதனகுணம் நுதலி
இன்ன திதுவென வரூஉம் இயற்கை
என்ன கிளவியும் பண்பின் தொகையே. ௨௦

899 உம்மைத்தொகை

இருபெயர் பலபெயர் அளவின் பெயரே
எண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
எண்ணின் பெயரோ டவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே. ௨௧

900 அன்மொழித்தொகை

பண்பு தொகவரூஉங் கிளவி யானும்
உம்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே. ௨௨

901 தொகைச்சொற்பொருணிலை

அவைதாம்,
முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையலும்



அம்மொழி நிலையா தன்மொழி நிலையலும்
அந்நான் கென்ப பொருணிலை மரபே. உ௧

902 தொகைச்சொல்ஒருசொல்லாய
நிற்றல்

எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய. உ௪

903 உம்மைத்தொகைக்குஉயர்திணைக்கின்றது

உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே
பலர்சொல் நடைத்தென மொழிமனார் புலவர். உரு

904 தொகைப்பதிகாரம்விட்டு மரபுகூறக்
காக்கின்றது

வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின எனக்கூ றுதலும்
அன்னவை எல்லாம் அவற்றவற் றியல்பான்
இன்ன என்னும் குறிப்புரை ஆகும். உ௬

905 இசைநிறையடுக்கிற்குவரையறை

* இசைப்படு பொருளே நான்குவரம் பாகும். உஎ

906 பொருளொடுபுணர்தலடுக்கிற்கு
வரையறை

விரைசொல் அடுக்கே மூன்றுவரம் பாகும். உஅ

* 'இசைப்படு' என்பது, சேனா-பாடம்

907 வினைச்சொற்களுள் ஒருசாரன
அசையாமாறு

கண்டீர் என்றா கேட்டீர் என்றா
சென்ற தென்றா போயிற் றென்றா
அன்றி அனைத்தும் வினாவொடு சிவணி
நின்றவழி அசைக்குங் கிளவி என்ப ௨௯

908 இதுவுமது

கேட்டை என்றா நின்றை என்றா
காத்தை என்றா கண்டை என்றா
அன்றி அனைத்தும் முன்னிலை அல்வழி
முன்னுறக் கிளந்த இயல்பா கும்மே ௩௦

909 வினைச்சொற்களுள் ஒருசாரனவற்றிற்கு
ஓர் குறியிடுதல் கூறுகின்றது

இறப்பின் நிகழ்வின் எதிர்வின் * என்ற
சிறப்புடை மரபின் அம்முக் காலமும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தான் வினையினும் குறிப்பினும்
மெய்ம்மை யானும் இவ்விரண் டாகும்
அவ்வா றென்ப முற்றியல் மொழியே. ௩௧

---

* 'என்றச்' என்பது வேறுபாடம்



910 மேலதற்கோர் புறனடை.

எவ்வயின் வினையும் * அவ்வயின் நிலையும். ௩௨

'911 முற்றுச்சொற்குமுடிபு

அவைதாம்,
தத்தங் கிளவி அடுக்குந வரினும்
எத்திறத் தானும் பெயர்முடி பினவே. ௩௩

912 எச்சச்சொற்களின் பெயர்முறை

தொகை

பிரிநிலை வினையே பெயரே ஒழிபிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே
குறிப்பே இசையே ஆயீ ரைந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட் கிளவி ௩௪

913 பிரிநிலையெச்சத்திற்குமுடிபு

அவற்றுள்,
பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின. ௩௫

914 வினையெச்சத்திற்குமுடிபு

வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபா கும்மே
ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே. ௩௬

* 'அவ்வியல்' என்பது சேனா-பாட



915 பெயரெச்சத்திற்குமுடிபு

பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே. ௩௭

916 ஒழியிசையெச்சத்திற்கு முடிபு

ஒழியிசை எச்சம் ஒழியிசை முடிபின. ௩௮

917 எதிர்மறையெச்சத்திற்கு முடிபு

எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின. ௩௯

918 உம்மையெச்சத்திற்கு முடிபு

உம்மை எச்சம் இருவீற் றானும்
தன்வினை ஒன்றிய முடிபா கும்மே ௪0

919 அவ்வெச்சவும்மையது காலமயக்கம்

தன்மேற் செஞ்சொல் வருஉங் காலை
நிகழுங் காலமொடு வாராக் காலமும்
இறந்த காலமொடு வாராக் காலமும்
மயங்குதல் வரையார் முறைநிலை யான. ௪௧

920 எனவெனெச்சமாமாறு

எனவென் எச்சம் வினையொடு முடிமே. ௪௨

921 எஞ்சியவெச்சங்கட்கு முடிபு வேற்றுமை

எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்
எஞ்சுபொருட் கிளவி இலவென மொழிப. ௪௩



922 குறிப்பெச்சமும் இசையெச்சமும் முடியுமாறு

தத்தங் குறிப்பின எச்சஞ் செப்பும் ௪௪

923 சொல்லெச்சத்திற்கு முடிபு

சொல்லென் எச்சம் முன்னும் பின்னும்

சொல்லள வல்ல செஞ்சுதல் இன்றே சரு
924 மரபுவழுக்காக்கின்றது
அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல். சசு
925 மேலதற்கோர்புறனடை
மறைக்குங் காலை மரீஇய தொரா அல் சஎ
926 ஈ தா, கொடுவென்னுமப்பலசொற்கு
மரபுவேறுபாடு
ஈதா கொடுவெனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிடன் உடைய. சஅ
927 ஈயென்பதன்மரபு
அவற்றுள்,
ஈயென கிளவி இழிந்தோன் கூற்றே சசு
928 தாவென்பதன்மரபு
தாவென் கிளவி ஒப்போன் கூற்றே. ருO

* இச்சூத்திரத்தின் முதலில் 'அவைதாம்' என்ற சொற்சேடியைக் கொண் டுரைப்பர் சேனாவரையர்.



929 கொடுவென்பதன்மரபு
கொடுவென கிளவி உயர்ந்தோன் கூற்றே ருக
930 கொடுவென்பதற்கு ஓர் உழு
அமைக்கின்றது
கொடுவென கிளவி படர்க்கை யாயினுந்
தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பிற்
றன்னிடத் தியலும் என்மனார் புலவர். ருஉ
931 இதுவுமொருசாரவழுவமைக்கின்றது
பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்

திசைநிலைக் கிளவியின் ஆஅ குநவும்
தொன்னெறி மொழிவயின் ஆஅ குநவும்
மெய்ந்நிலை மயக்கின் ஆஅ குநவும்
மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்
அன்றி அனைத்தும் கடப்பா டிலவே. ௫௩

932 ஓசைவேறுபாட்டான் ஒருசொல்
ஒருசொல்லாமென்கிறது.

செய்ப்பாய் எனனும் முன்னிலை வினைச்சொல்
செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே. ௫௪

933 பொருளிடைச்சொற்களுட்சில
நிலைவேறுபாடு

முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே. ௫௫



934 புதியசொற்களுங்கொள்கவெனல்

கடிசொல் இல்லைக் காலத்துப் படினே. ௫௬

935 செய்யுள் விகாரம்

குறைச்சொற் கிளவி குறைக்கும் வழி அறிதல் ௫௭

936 மேலதற்கோர் புறனடை

குறைத்தன வாயினும் நிறைப்பெயர் இயல ௫௮

937 விசேடிக்குஞ்சொல் இவ்வாறு
நிற்குமெனல்

இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச்
சொல்லே ௫௯

938 உரிச்சொற்கும் விசேடித்தலுண்டெனல்

உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய ௬௦

939 வினையெச்சமுதலியனவேறுபெயர்
பெறுமெனல்

வினையெஞ்சு கிளவியும் வேறுபல குறிய ௬௧

940 தொடர்மொழிப்பொருள்வேறுபாடு

உரையிடத் தியலும் உடனிலை அறிதல். ௬௨

941 வினைக்குறிப்புச்சொல்பொருள்தரும
வேறுபாடு

முன்னத்தின் உணருங் கிளவியும் உளவே
இன்ன என்னும் சொல்முறை யான. ௬௩



942 ஒருசொல் இருபொருளுணர்த்தவதோர்
மரபுவழுவமைக்கின்றது

ஒருபொருள் இருசொற் பிரிவில வரையார். ௬௪

943 பால்வழு அமைக்கின்றது

ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகும் இடனுமா ருண்டே. ௬௫

944 ஆற்றுப்படையில் முன்னிலையொருமை
பன்மையொடு முடிகவெனல்

முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலை யின்றே
ஆற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும். ௬௬

945 அதிகாரப்புறனடை

செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி யெல்லாம்
பலவேறு செய்தியின் நூனெறி பிழையாது

எசசவியல முறறிறறு.
சொல்லதிகாரச சூத்திரங்கள் 462
முற்றிற்று.

22

உ

# பொருளதிகாரம்

## சூத்திரத்தொகைவகை.

— —

ஈட்டும அகததிணையும ஏய்நத புறததிணையும
காட்டு களவியலும கறபியலும—ஈட்டும
பொருளியலமெயயபபாடுவமம பேசறறிய செய்யுள
மரபியலும ஆமபொருளின வைபபு

பூமலர்மென் கூநதால்' பொருளியலிற சூததிரங்கள
ஆவவறு நூறறறுபத தைநதாகும—மூவகையால
ஆயிரத்தின மேலும் அறுநூற றெருபதெனப
பாயிரதசொல காபபியனறபா.

— ο —

உ

மூன்றுவது

# பொருளதிகாரம்.

முதலாவது

## அகத்திணையியல்.

---

946 எழுவகைத்திணை

கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப. க

947 எழுவகையுள் தமக்கென நிலம் பெறுவனவும் பெறாதனவுங் கூறுதல்

அவற்றுள்,
நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே. உ

948 பாடலுட்பயின்ற மூவகைப்பொருள்

முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை. ஙு

949 முதற்பொருளினைத்தெனல்

முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே. ச



950 நால்வகை நிலம்

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்

வருணன் மேய பெருமணல உலகமும

முலலை குறிஞசி மருதம நெயதலெனச
சொலலிய முறையாற சொலலவும படுமே ரு

951 முலலைககுககுறிஞசிககுமபொழுதுகூறல

காரும மாலையும முலலை குறிஞசி
கூதிர யாமம எனமனுர் புலவர் சு

952 எயதியதன்மேறசிறபபுவிதி

பனியெதிர் பருவமும உரிததென மொழிப எ

953 சிறுபொழுதேபெறுவனகூறல்

* வைகுறு விடியல மருதம எறபாடு
நெய்தல ஆதல மெய்பெறத தோனறும. அ

954 நானிலததுககுமபாலைககுககாலஙகூறல

நடுவுநிலைத் திணையே நண்பகல வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே. கூ

955 எய்தியதன்மேறசிறப்புவிதி

பின்பனி தானும உரித்தென மொழிப. க0

---

* 'லைகறை' எனவும் பாடம்



956 பாலைப்பகுதியுமுரிய பின்பனியும்

இருவகைப் பிரிவும நிலைபெறத் தோன்றினும
உரிய தாகும எனமனா புலவா. கக

957 மேலனவற்றிறகுப்புறனடை

திணைமயக் குறுதலும கடிநிலை இலவே
நிலனொருஙகு மயஙகுதல இனறெனமொழிப
புலனன குணாநத புலமை யோரே. கஉ

958 எயதாததெயதவிதத து

உரிபபொருள அலலன மயஙகவும பெறுமே கரு

959 உரிப்பொருள கூறல

புணர்தல பிரிதல இருததல் இரங்கல

ஊடல இவறறின் நிமிததம என்றிவை

தேருங காலைத திணைக்குரிப பொருளே. கச

960 பாலைக்கட்குறிஞசியுமெயதலுமயஙகல

கொண்டுதலைக கழியினும் பிரிநதவண் இரங்கினும

உண்டென மொழிப ஓரிடத தான. கரு

961 பாலைக்கட்குறிஞ்சிமயஙகுதல்

கலநத பொழுதும காட்சியும் அன்ன. கசு

962 முதற்பொருளிருவகைத்தெனல்

முதலெனப படுவ தாயிரு வகைதது. கஎ

174 பொருளதிகாரம்

963 கருப்பொருளிவையெனல்

தெய்வம உணவே மாமாம புட்பறை

செயதி யாழின பகுதியொடு தொகைஇ

அவவகை பிறவும கருவென மொழிப கஅ

964 கருபபொருட்குப்புறனடை

எநநிலை மருஙகிற பூவும புளளும

அநநிலம பொழுதொடு வாரா வாயினும

வநத நிலத்தின் பயத்த வாகும. கசு

965 திணை நிலைப்பெயரிருவகை

பெயருமவினையுமென ருயிரு வகைய

திணைதொறுமமரீஇய திணைநிலைப பெயரே. உ0

966 முல்லைக்குங்குறிஞ்சிக்கும் தலைமக்கள்

ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்
ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே. உக

967 பாலைக்குத்தலைமக்கள்

ஏனோர் பாங்கினும் என்னும் காலை
ஆறு வகைய திணைநிலைப் பெயரே. உஉ

968 கைக்கிளை, பெருந்திணைக்கண் தலைமக்களாவார்

அடியோர் பாங்கினும் வினைவல பாங்கினும்
கடிவரை யிலபுறத் தென்மனார் புலவர். உ௩



969 திணைநிலைப்பெயராதற்குரிய அறுவர்

ஏவல் மரபின ஏனோரும் உரியர்
ஆகிய நிலைமை யவரும் அன்னர். உ௪

970 பாலைத்திணைக்குரியது

ஓதல் பகையே தூதிவை பிரிவே. உ௫

971 முதலிருவர்க்குரிய இருபிரிவு

அவற்றுள்,
ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன. உ௬

972 அரசர்க்குரியபகைவயிற்பிரிவு

தானே சேறலும் தன்னொடு சிவணிய
ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே உ௭

973 அரசர்நெறிமுறையடிப்படுத்தப்பிரியுமாறும் வணிகர்பொருள்வயிற்பிரியுமாறுங்கூறல்

மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய
முலலை முதலாச சொலலிய முறையாற
பிழைததது பிழைபபா தாகல வேணடியும
இழைதத ஒணபொருள முடியவும பிரிவே உஅ
974 எயதாததெயதுவிததது
மேலோா முறைமை நாலவாக்கும உரிததே. உகூ
975 வேளாளாககுரியமறறோாபிரிவுவிகற்டம்
மன்னர் பாஙகிற பினனோா ஆகும. ௩0
176 பொருளதிகாரம்
976 நால்வருணத்தார்ககுமெய்தாத
தெய்துவிததது
உபாநதோர்க் குரிய ஓதறகு னன. ௩க
977 பதினெண்வேளிாககும வேநதன்
வினையுரிததது
வேநதுவினை இயறகை வேநதனின ஒரீஇய
ஏனோா மருஙகினும எய்திடன் உடைததே. ௩உ
978 குறுநிலமன்னாககுரியவிருபிரிவு
பொருளவயிற பிரிதலும அவர்வயின் உரிததே
உபாநதோர் பொருளவயின் ஒழுககத தான. ௩௩
979 பொருள்முதற்பிரிவிற்றலைவியுடன்
செல்லாமை
முநநீா வழக்கம் மகடூஉவோ டிலலை. ௩௪
980 மகடூஉ மடலேறாமை
எததிணை மருங்கினும் மகடூஉ மடலமேற்
பொறபுடை நெறிமை இன்மை யான. உ௫
981 உடனபோககிடத்துநறறாயிரஙகல்

தன்னும் அவனும் அவளும் சுட்டி
மன்னு நிமித்தம மொழிப்பொருள் தெய்வம்
நன்மை தீமை அச்சம் சார்தலென்
றன்ன பிறவும் அவற்றொடு தொகைஇ



முன்னிய காலம் மூன்றுடன் விளக்கித்
தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும்
போகிய திறதது நற்றாய் புலம்பலும்
ஆகிய கிளவியும் அவ்வழி உரிய. ௩௬

982 எய்தியதன் மேற்சிறப்புவிதி

ஏமப பேரூாச சேரியும் சுரத்தும
தாமே செலலும தாயரும உளரே. ௩௭

983 பார்ப்பாரைக்கோவேறுபாகூறல்

அயலோர் ஆயினும் அகற்சி மேறறே. ௩௮

984 தாயாககுரியனகூறித்தோழிக்குக்
கூற்றுநிகழுமாறுணாத்தல்

தலைவரும் விழும நிலையெடுத் துரைப்பினும்
போககற கண்ணும் விடுததற கண்ணும்
நீக்கலின வநத தம்முறு விழுமமும்
வாய்மையும் பொய்மையும் கண்டோர்ச் சுட்டித்
தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொளினும்
நோய்மிகப் பெருகித தன்னெஞ்சு கலுழ்ந்தோளை
அழிநதது களைஇய ஒழிநதது கூறி
வன்புறை நெருஙகி வநததன திறத்தோ
டென்றிவை எலலாம இயலபுற நாடின்

985 இடைச்சுரத்துக்கண்டோர்கூறுவன

பொழுதும ஆறும உட்குவாத தோனறி
வழுவின் ஆகிய குறறம காட்டலும்
ஊாது சார்வும செலலும தோபறும
ஆாவ நெஞ்சமொடு செபபிய வளியும
புணர்நதோர் பாஙகிற புணாநத நெஞசமொ
டழிநதெதிா கூறி விடுப்பினும ஆஙகத
தாய்நிலை கணடு தடுப்பினும விடுபபினும
சேய்நிலைக ககன்றோர் செலவினும வரவினும
கண்டோா மொழிதல கணட தெனப ௪௦

986 உடனபோககினுள நறறாயுநதோழியுந
கண்டோருங கூறுவனகூறிததலைவன ஆணடும
பிறவணடுங் கூறுவன கூறல

ஒன்றுத் தமரினும பருவததும சுரததும
ஒனறிய தோழியொடு வலிபபினும விடுபபினும
இடைச்சுர மருஙகின அவளதமா எயதிக
கடைககொண்டு பெயாததலிற கலஙகஞர் எய்திக
கறபொடு புணர்நத கௌவை உளபபட
அபபாற படட ஒருதிறத தானும
நாளது சினமையும் இளமைய தருமையும
தாளாண் பக்கமும தகுதிய தமைதியும

அன்பின தகலமும அகற்சிய தருமையும
ஒனறுப பொருளவயின் ஊககிய பாலினும்
வாயினும கையினும வகுத்த பக்கமோ
நீதியம கருதிய ஒருதிறத தானும்
புகழும மானமும எடுததுவற புறுத்தலும்
தூதிடை யிடட வகையி னானும
ஆகித தோனறும பாஙகோர பாஙகினும்
மூனறன பகுதியும மணடிலத் தருமையும
தோனறல சானற மாறறோர் மேன்மையும
பாசறைப புலமபலும முடிநத காலத்துப
பாகனொடு விருமபிய வினைததிற வகையினும்
காவற பாஙகின் ஆஙகோர் பக்கமும
பரததையின் அகறசியிற பரிநதோட் குறுகி
இரததலும தெளித்தலும எனவிரு வகையோ
டுரைததிற நாடடமும கிழவோன் மேன. சக

987 எயதாததெய்துமிகுதது
எஞ்சி யோரககும எஞசுதல இலவே. சஉ
988 பாலைபாவதோரிலககணம
நிகழ்நதது நினைததற கேதுவும் ஆகும். சங
989 சக-ம் சூத்திரததுககுப்புறனடை
நிகழ்ந்தது கூறி நிலையலும் திணையே. சச



990 அகததிணைககுரியமரபுகள்

மரபுநிலை திரியா மாட்சிய வாகி
விரவும் பொருளும் விரவும என்ப. சரு

991 அகததிணைககைகோட்கூரியது
உள்ளுறை உவமம ஏனை உவமமெனத
தள்ளா தாகுந திணையுணர் வகையே. சசு

992 உள்ளுறையுவமககூறுவது
உள்ளுறை தெய்வம ஒழிநததை நிலனெனக்
கொளளும எனப குறியறிந தோரே சஎ

993 உள்ளுறையுவமம்உவமககொள்ளுமாறு
உள்ளுறுத திதனோடொததுப்பொருள் முடிகென
உள்ளுறுத துறுவதை உளளுறை உவமம. சஅ

994 ஒழிநதஉவமககூறுவது
ஏனை உவமம தானுணர் வகைததே. சசு

995 கைககிளைககுச்சிறநதபொருளிதுவெனல
காமஞ சாலா இளமை யோளவயின
ஏமஞ சாலா இடும்பை எய்தி
நனமையும தீமையும என்றிரு திறத்தால
தன்னொடும அவளொடும தருக்கிய புணர்த்துச
சொலலெதிர் பெறாஅன சொல்லி இன்புறல
புலனித தோன்றும கைக்கிளைக் குறிப்பே. ௫0



996 பெருநதிணையிலக்கணம்
ஏறிய மடறதிறமா இளமை தீர்திறம்
தேறுதல ஒழிநத காமதது மிகுதிறம்
மிகக காமதது மிடலொடு தொகைஇச

செபபிய நான்கும பெருந திணைக குறிப்பே. ௩௧

997 எயதாதெய்தவிததது

முனனைய நானகும முன்னதற கெனப. ௩௨

998 புலனெறிவழககமஇவற்றிற்குரிமை உடைத்தெனல

நாடக வழககினும உலகியல வழககினும
பாடல சானற புலனெறி வழககம
கலியே பரிபாட டாயிரு பாஙகினும
உரிய தாகும எனமனார் புலவர். ௩௩

999 இநதிணைககாவதோரவரையறை

மககள் நுதலிய அகனைநதிணையும
சுட்டி ஒருவர்ப பெயர்கொளப பெறாஅர். ௩௪

1000 புறததிணைககெயதாததெயதவித தெயதியதவிலககல

புறததிணை மருஙகிற பொருநதின் அல்லது
அகததிணை மருஙகின் அளவுதல் இலவே. ௩௫

## அகததிணையியல் முற்றிறறு

## இரண்டாவது

# புறத்திணையியல்.

---

1001 வெட்சிபதினொருதுறையதெனல்

அகததிணை மருங்கின் அரிலதப உணர்நதோர்
புறத்திணை இலக்கணம் திறபபடக் கிளபபின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
உட்குவரத தோனறும ஈரேழ் துறைததே. ௧

1002 வெட்சியின்பொதுவிலககணம்

வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந் தோம்பல் மேவற் றாகும். ௨

1003 ஈரேழ்துறையுமிருபத்தெட்டாமாறு
படையியங் கரவம் பாக்கத்து விரிச்சி
புடைகெடப் போகிய செலவே புடைகெட
ஒற்றின் ஆகிய வேயே வேய்ப்புறம்
முற்றின் ஆகிய புறத்திறை முற்றிய
ஊர்கொலை ஆகோள் பூசல் மாற்றே
நோயின் றுய்த்தல் நுவலுழித் தோற்றம்
தந்துநிறை பாதீ டுண்டாட்டுக் கொடையென
வந்த ஈரேழ் வகையிற் றாகும். ௩

1004 வெட்சிக்குப்புறனடை
மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே. ௪



1005 புறத்திணைப்பொதுவழக்குமுறைத்தல
வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளும் உறுபகை
வேந்திடைத் தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப்
போந்தை வேம்பே ஆரென வரூஉம்
மாபெருந் தானையர் மலைந்த பூவும்
வாடா வள்ளி வயவர் ஏத்திய
ஓடாக் கழனிலை உளப்பட ஓடா
உடல்வேந் தடுக்கிய உன்ன நிலையும்

மாயோன மேய மனபெருஞ சிறபபில
தாவா விழுபபுகழப பூவை நிலையும
ஆரமா ஓடடலும ஆபெயர்ததுத தருதலும
சீரசால வேநதன சிறபபெடுத துரைததலும
தலைததாள நெடுமொழி தனனொடு புணாததலும
அனைககுரி மரபினது கரநதை அனறியும
வருதார தாஙகல வாளவாயததுக கவிழதலென
திருவகைப் படட பிளளை நிலையும
வாள்மலைந தெழுநதோனை மகிழநது பறைதூஙக
நாடவற கருளிய பிளளை யாடடும
காட்சி காலகோள நீர்பபடை வாழததலென
திருமூன்று வகையிற கலலொடு புணரச்
சொல்லப் பட்ட எழுமூனறு துறைததே. ரு



1006 வஞ்சி, இன்னதன் புறமெனல்
வஞ்சி தானே முலலையது புறனே. சு

1007 வஞசித்திணை, இன்னபொருட்டெனல்
எஞசா மண்ணசை வேநதனை வேநதன்
அஞசுதகத தலைசசென றடலகுறித தன்றே. எ

1008 வஞசிபதின்மூன் றுதுறையதெனல்
இயஙகுபடை அரவம எரிபரந தெடுததல
வயஙகல எய்திய பெருமை யானும
கொடுததல எயதிய கொடைமை யானும

அடுத்தூர்ந் தட்ட கொற்றத் தானும்
மாராயம் பெற்ற நெடுமொழி யானும்
பொருளின் றுய்த்த பேராண் பக்கமும்
வருவிசைப் புனலைக் கற்சிறை போல

ஒருவன் தாங்கிய பெருமை யானும்
பிண்டம் மேய பெருஞ்சோற்று நிலையும்
வென்றோர் விளக்கமும் தோற்றோர் தேய்வும்
குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையும்
அழிபடை தட்டோர் தழிஞ்சியொடு தொகைஇக்
கழிபெருஞ் சிறப்பிற் றுறைபதின் மூன்றே. அ

1009 உழிஞை, இன்னதன்புறத்ததெனல

உழிஞை தானே மருதத்துப் புறனே. கூ



1010 உழிஞையின் பொதுவிலக்கணம்

முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்
அனைநெறி மரபிற் றாகும் என்ப. க0

1011 உழிஞை எட்டுத்துறையதெனல

அதுவே தானும் இருநால் வகைத்தே. கக

1012 உழிஞைத்துறையின பெயர்முதலியன

கொள்ளார் தேஎம் குறித்த கொற்றமும்
உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்
தொல்லெயிற் கிவர்தலும் தோலின் பெருக்கமும்
அகத்தோன் செல்வமும் அன்றி முரணிய

புறத்தோன் அணங்கிய பக்கமும் திறப்பட
ஒருதான் மண்டிய குறுமையும் உடனோர்
வருபகை பேணார் ஆரெயில் உளப்படச்
சொல்லப் பட்ட நாலிரு வகைத்தே. கஉ

1013 எய்தாததெய்தவித்தது

குடையும் வாளும் நாள்கோள் அன்றி
மடையமை ஏணிமிசை மயக்கமும் கடைஇச்
சுற்றமர் ஒழிய வென்று கைக்கொண்டு
முற்றிய முதிர்வும் அன்றி முற்றிய
அகத்தோன் வீழ்ந்த நொச்சியும் மற்றதன்





புறத்தோன் வீழ்ந்த புதுமை யானும்
நீர்ச்செரு வீழ்ந்த பாசியும் அதாஅன்று
ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனும்
அகமிசைக் கிவர்ந்தோன் பக்கமும் இகன்மதிற்
குடுமி கொண்ட மண்ணு மங்கலமும்
வென்ற வாளின் மண்ணோ டொன்றத்
தொகைநிலை என்னும் துறையொடு தொகைஇ
வகைநான் மூன்றே துறையென மொழிப. கந

1014 தும்பை, இன்னதன புறத்ததெனல

தும்பை தானே நெய்தலது புறனே. கச

1015 தும்பையின் பொது இலக்கணம்

மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்றுதலை யழிக்கும் சிறப்பிற் றெனப. கரு

1016 எய்தியதன்மேற்சிறப்புவிதி

கணையும் வேலுந் துணையுற மொய்த்தலிற்
சென்ற உயிரின் நின்ற யாக்கை
இருநிலந் தீண்டா அருநிலை வகையொ
டிருபாற் பட்ட ஒருசிறப் பின்றே. கசு

1017 தும்பை பன்னிருதுறையதெனல்

தானை யானை குதிரை என்ற
நோனார் உட்கும் மூவகை நிலையும்



வென்றிமிகு வேந்தனை மொய்த்தவழி ஒருவன்
தான்மீண் டெறிந்த தார்நிலை அன்றியும்
இருவர் தலைவர் தபுதிப் பக்கமும்
ஒருவன் ஒருவனை உடைபடை புக்குக்
கூழை தாங்கிய எருமையும் படையறுத்துப்
பாழி கொள்ளும் ஏமத் தானும்
களிறெறிந் தெதிர்ந்தோர் பாடுங் களிற்றொடு
பட்ட வேந்தனை அட்ட வேந்தன்
வாளோர் ஆடும் அமலையும் வாள்வாய்த்
திருபெரு வேந்தர் தாமுஞ் சுற்றமும்
ஒருவரும் ஒழியாத் தொகைநிலைக் கண்ணும்

செருவகத் திறைவன் வீழ்நதெனச் சினைஇ
ஒருவன மண்டிய நலனிசை நிலையும
பலபடை ஒருவற குடைதலின் மறறவன்
ஒளவாள வீசிய நூழிலும உளபபடப
புலவிது தோன்றும் பன்னிரு துறைத்தே. கள

1018 வாகை இன்னதன்புறதததெனல
வாகை தானே பாலையது புறனே. கஅ

1019 வாகையின் பொதுவிலக்கணம

தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்
பாகுபட் மிகுதிப் படுத்தல் என்ப. கக



1020 வாகையின் சிறப்பிலக்கணம்
அறுவகைப பட்ட பார்பபனப பக்கமும
ஐவகை மரபின அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும
மறுவில செய்தி மூவகைக காலமும
நெறியின் ஆற்றிய அறிவன தேயமும
நாலிரு வழககிற றாபதப பககமும
பாலறி மரபிற பொருநர் கண்ணும
அனைநிலை வகையோ டாங்கெழு வகையிற
றொகைநிலை பெறறு தெனமனூர் புலவர உ௦

1021 மறததுறைஅறததுறைபதினெட்டெனல
கூதிர் வேனில என்றிரு பாசறைக
காதலின் ஒன்றிக கண்ணிய மரபினும
ஏரோர் களவழி அன்றிக களவழித

தேரோர் தோற்றிய வென்றியும் தேரோர்
வென்ற கோமான் முன்தேர்க் குரவையும்
ஒன்றிய மரபிற் பின்தேர்க் குரவையும்
பெரும்பகை தாங்கும் ஆற்ற லானும்
புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும்
ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச்
சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்ந்து
தொல்லுயிர் வழங்கிய அவிப்பலி யானும்



ஒல்லார் இடவயிற் புல்லிய பாங்கினும்
பகட்டி னானும் மாவி னானும்
துகட்டபு சிறப்பிற் சான்றோர் பக்கமும்
கட்டின நீத்த பாலி னானும்
எட்டுவகை நுதலிய அவையத் தானும்
கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை யானும்
இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்
பிழைத்தோர்த் தாங்கும் காவ லானும்
பொருளொடு புணர்ந்த பக்கத் தானும்
அருளொடு புணர்ந்த அகற்சி யானும்
காமம் நீத்த பாலி னானுமென்
றிருபாற் பட்ட ஒன்பதிற் றுறைத்தே உ௧

1022 காஞ்சி, இன்னதன்புறத்ததென்ப

காஞ்சி தானே பெருந்திணைப் புறனே. உ௨

1023 காஞ்சியின்பொதுவிலக்கணம்

பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானும

நில்லா உலகம் புல்லிய நெறித்தே. ௨௩

1024 நிலையின்மைப்பொருளை வருத்தோ நிறுத்த

மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமையும்
கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்
பண்புற வரூஉம் பகுதி நோக்கிப்



புண்கிழித்து முடியும் மறத்தி னானும்
ஏமச் சுற்றம் இன்றிப் புண்ணோற்
பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும்
இன்னனென் றிரங்கிய மன்னை யானும்
இன்னது பிழைப்பின் இதுவா கியரெனத்
துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத் தானும்
இன்னகை மனைவி பேஎய் புண்ணோற்
றுன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியும்
நீத்த கணவற் றீர்த்த வேலிற்
பேஎத்த மனைவி ஆஞ்சி யானும்
நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு முதுகுடி
மகட்பா டஞ்சிய மகட்பா லானும்
முலையும் முகனும் சேர்த்திக் கொண்டோன்
தலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ
ஈரைந் தாகும் என்ப பேரிசை
மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம்
மாய்ந்த பூசல் மயக்கத் தானும்
தாமே ஏங்கிய தாங்கரும் பையுளும்

கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்
செல்வோர் செப்பிய மூதா னந்தமும்
நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து
தனிமகள் புலம்பிய முதுபா லையும்



கழிந்தோர் தேஎத் தழிபடர் உறீஇ
ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும்
காதலி இழந்த தபுதார நிலையும்
காதலன் இழந்த தாபத நிலையும்
நல்லோள் கணவனொடு நளியழல் புகீஇச்
சொல்லிடை யிட்ட பாலை நிலையும்
மாய்பெருஞ் சிறப்பிற் புதல்வற் பயந்த
தாய்தப வரூஉம் தலைப்பெயல் நிலையும்
மலர்தலை யுலகத்து மரபுநன் கறியப்
பலர்செலச் செல்லாக் காடுவாழ்த் தொடு
நிறையருஞ் சிறப்பிற் றுறையிரண் டுடைத்தே ௨௪

1025 பாடாண் திணையுந்தன் எண்வகைப்

பொருளும்

பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே
நாடுங் காலை நாலிரண் டுடைத்தே. ௨௫

1026 தேவர்ப்பகுதியுரைத்தல்

அமரர்கண் முடியும் அறுவகை யானும்

புரைதீர் காமம் புல்லிய வகையினும்
ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப. ௨௬

1027 மகட்பகுதிக்கூறுவது

வழங்கியல் மருங்கின் வகைபட நிலைஇப்
பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்



முன்னோர் கூறிய குறிப்பினும் செந்துறை
வண்ணப் பகுதி வரைவின் றாங்கே ௨௭

1028 மேற்பகுதிகட்கெய்தியதன்மேற்
சிறப்புவிதி

காமப் பகுதி கடவுளும் வரையார்
ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர். ௨௮

1029 புரைதீர்காமத்திற்குப்புறனடை

குழவி மருங்கினும் கிழவ தாகும் ௨௯

1030 பகுதிநாமத்திற்குப்புறனடை

ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப. ௩0

1031 மேலைச்சூத்திரங்கட்குப்புறனடை

வழக்கொடு சிவணிய வகைமை யான. ௩௧

1032 அகத்திணைகெழுமிடம

மெய்ப்பெயர் மருங்கின் வைத்தனர் வழியே. ௩௨

1033 பாடாண்டிணைக்குரியபிறப்பில்லாத
தெய்வங்கள்

கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே. ௩௩

